# ஞானசம்பந்தம்



தருமையாதீனத் திங்கள் இதழ்



மலர் 43] ருத்ரோத்காரி ஆண்டு தைத்திங்கள் 10-2-84 [இதழ்

தருமையாதீனம்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்

காசி ஸ்ரீ விசுவநாதருக்குப் பாலபிஷேகம் செய்து வழிபடுதல்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

பாடும் படிசெய் நினைநினைந்
 பணிந்தெழுந்தே [தேத்திப்
ஆடும் படிசெய் மலம்ஐந்து
 யேன்உளத்தே [மே அடி
வீடும் படிசெய் நின் ஆனந்த
 மேல்எனவே [சாகரம்
நாடும் படிசெய் மதுரா
 நாயகனே. [புரிச்சொக்க

—சொக்கநாதக் கலித்துறை 4

ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல்முதலியார்

குருபாதம்

# "ஞானசம்பந்தர்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 43 | 10-2-84 | இதழ் 3

## உட்பொருள்

| எண் | | பக்கம் |
|---|---|---|
| 1 | ஆரூர் அரசற்கு அரியதோர் திருப்பணி | 129 |
| 2 | தருமைஸ்ரீலஸ்ரீகுருமகா சந்நிதானம் அவர்கள் வழங்கிய ஆசியுரை ... | 135 |
| 3 | ஆனையர் ... | 143 |
| 4 | அபிராமி அந்தாதி ... | 145 |
| 5 | திருவருட்பாத்திரட்டு... | 153 |
| 6 | உலகக் குடும்பம் ... | 157 |
| 7 | தனுர்மாத வழிபாடு ... | 160 |
| 8 | பார்வையாளர் குறிப்பு | 161 |
| 9 | ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் சமுதாயப் பணிகள் ... | 162 |
| 10 | எதிர்காலம் ... | 167 |
| 11 | கடிதம் ... | 172 |
| 12 | செய்திகள் ... | 174 |
| 13 | கேதாரம் நோக்கி! ... | 180 |
| 14 | அனைத்துலக முதல் சைவ சித்தாந்தக் கருத்தரங்கம் (அ-4) ... | 183 |
| 15 | இரத்தாக்ஷி ஆண்டு உற்சவ நிர்ணயம் ... | 184 |

ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 23
ஆண்டுச் சந்தா வெளிநாடு ரூ. 25
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 250

# ஞானசம்பந்தம்

மலர் 43 | ருத்ரோத்காரி - தை - 10—2—84 | இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்.

## ஆரூர் அரசற்கு அரியதோர் திருப்பணி

### அற்புத நிகழ்ச்சி :

திருவாரூர்த் திருக்கோயிலில் 450 ஆண்டுகளுக்கு முன் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. அலங்கரிக்கப்பெற்ற பந்தல்: ஆயிர மாயிரம் அடியவர் திருக்கூட்டம் : அசபாநடன அழகராகிய தியாகராஜர் பல்லக்கில் பவனி வருகிருர். ஐயனின் திருநடங் கண்டு அன்பர்கள் மெய்மறந்து நிற்கின்றனர். திடீரென ஒரு பேரொலி. தியாகரின் பல்லக்கின் தண்டு முறிகிறது. மக்கள் மனந்தடுமாறி ஒடுகின்றனர். பல்லக்குச் சாய்ந்துவிடாது அன்பர்கள் பற்றி நிற்கின்றனர். கூட்டத்தின் நடுவிலிருந்து அருள்ாளர் ஒருவர் முன்வருகிருர். தியாகேசனைக் கைகூப்பி வ்ணங்குகின்ருர். கண் அருவி பொழிகிறது. கம்பீரமான குரலில் அவர் திருவாயிலிருந்து கவிதை ஒன்று பிறக்கிறது.

" அண்டம்முழு தும்ஆழ்ந்து போகாமல் என்றும்போல்
பண்டை நிலைநிறுத்தும் பாதனே — துண்டுபட்ட
அசபா திருத்தம் அசையும் படிதன்(டு)
இசையும் வகையருள்வாய் இன்று "

என்ன வியப்பு: பல்லக்கின் முறிந்த தண்டு இணைகிறது. பக்தர்களின் கண்களில் ஆனந்தக்கண்ணீர் நிறைகிறது: இவ்வற்புதம் நிகழக் காரணமாக அங்கு நின்ற அருளாளரை அன்பர்கள் போற்றிப் புகழ்கின்றனர். அவர்தான் கமலை ஞானப்பிரகாசர்.

## இராஜன் கட்டளை :

அவரே மேற்கண்ட அருளற்புதத்தைத் திருவருளால் நிகழ்த்தியவர். திருக்கயிலாய பரம்பரையில் வந்த ஞானாசிரியர். இவர் மாணக்கருள் தலைசிறந்த குருஞானசம்பந்தரே தருமபுர ஆதீனத்தைத் தோற்றுவித்தவர். 'சிதம்பர நாத மாசிலாமணி கமலை ஞானப்பிரகாச பண்டாரம்' என ஆதீன அருள் நூல்களுள் குறிக்கப்பெறும் இவ்வருளாளர் அருளிய ஞானநூல்கள் பல. தியாகராசர்கழிநெடில், திருவாரூர்ப்பள்ளு ஆகிய தமிழ் நூல்களும், தியாகராசர் லீலா! என்ற வடமொழி நூலும் திருவாரூர்த் தொடர்பாக இவர் இயற்றியன. தஞ்சை மன்னர்களும், விஜயநகர வேந்தர் கிருஷ்ண தேவராயரும் இவ்வருளாளருக்கு அளித்த இறையிலி நிலங்கள் இராஜன்கட்டளை என வழங்கப்பெற்றது. பன்னூறு ஆண்டுகளாக இக்கட்டளையிலிருந்து திருவாரூர்ப் பெருமானுக்கு நித்திய நைமித்திக வழிபாடுகள் முறையாக நிகழ்த்தப்பெற்று வருகின்றன. இன்றும் இக்கட்டளை தருமையாதீனத்தின் பராமரிப்பில் நிலவி வருகிறது.

## தருமையாதீனத் திருப்பணிகள் :

இராஜன்கட்டளையைத் துணையாகக் கொண்டு தருமபுர ஆதீனம் திருவாரூர்த் திருக்கோயிலுக்குப் பல்வேறு திருப்பணிகளைத் திட்டமிட்டு நிறைவேற்றி உள்ளது. தருமையாதீனம் பன்னிரண்டாவது குருமூர்த்திகள் முத்துக்குமாரதேசிகர் (கி. பி. 1782 – 1827) ஆட்சிக்காலத்தில் இராஜன்கட்டளை, கட்டளை விசாரணையிலிருந்த முத்துக்குமாரசுவாமித்தம்பிரான்சுவாமிகளின் அரிய முயற்சியால் பல்லாண்டுகளாக ஓடாதிருந்த திருவாரூர்த் திருத்தேர் கி. பி. 1820ல் ஓடவிடப்பெற்றது. தியாகராசப் பெருமானுக்கு நல்ல அபரஞ்சித்தங்கத்தில் நவரத்தினக்கற்கள் பதித்த 'கண்ட மகரி' என்ற திருவாபரணம்

செய்தளிக்கப் பெற்றது. இச்செலவுகளுக்காக இக்கட்டளைக்குச் சொந்தமான நாட்டிருப்பு அக்கரைநல்லூர் என்ற கிராமம் கந்தப்பச்செட்டி என்பவரிடம் 'கமரி அடை ஒத்தி' (சொத்து பெந்தகம்) யாக வைத்துப் பணம் பெறப்பட்டிருக்கிறது. பத்தாவது குருமூர்த்திகள் சிவஞானதேசிகர் (கி. பி. 1715 – 1770) ஆட்சிக் காலத்தில் திருவாரூர்த் திருக்கோயில் பணிகளுக்காகக் கிடாரங்கொண்டான் கூத்தச்சியின் மகளைப் பத்துப் பொன் கொடுத்துக் கிரயத்துக்கு வாங்கிச் சமயச் சேவையில் ஈடுபடுத்தப்பெற்றுள்ளது. பதினேழாவது குருமூர்த்திகள் மாணிக்கவாசக தேசிகர் (கி. பி. 1874 – 1889) ஆட்சிக் காலத்தில் திருவாரூர் இராஜன் கட்டளை, கட்டளைவிசாரணையாக விளங்கிய அருணசலத் தம்பிரான் சுவாமிகளின் அரிய முயற்சியால் திருவாரூர்த் திருக்கோயில் தெற்குக் கோபுரத் திருப்பணி நிறைவு செய்யப்பெற்று கி. பி. 1897 இல் கும்பாபிஷேகம் நிகழ்த்தப்பெற்றது. இவ்வாறன ஆதீனத்திருப்பணிகள் மிகப்பல. இத்திருக்கோயிலின் பெருமை விரிப்பிற்பெருகும். தொகுக்கின் எஞ்சும்.

### வரலாற்றுச் சிறப்பு :

தென்னாட்டில் விளங்கும் சிவத்தலங்கள் பலவற்றுள்ளும் பழமையும் பெருமையும் உடைய திருத்தலம் திருவாரூர். சோழ மன்னர்களின் தலைநகரங்கள் ஐந்தனுள் ஒன்று இவ்வூர். மனுநீதிச் சோழமன்னன் நெறி வழுவாது அரசாண்டு நீதிக்காகத் தன் மகனையே தேர்க்காலில் இட்டு முறை செய்துகாத்த சிறப்புடையது. தில்லையில் கண்டெடுத்த தேவாரத்திருமுறைகளையும் அவற்றோடு பிற திருமுறைகளையும் தொகுத்துப் பன்னிரு திருமுறைகளாக்கி அவற்றைச் செப்பேடுகளில் எழுதுவித்து, தியாகேசர்சந்நிதியில் ஏற்றுவித்த அபயகுல சேகரசோழ மன்னரும், அநபாயசோழரும் வீற்றிருந்து அரசாண்ட பெருமையை உடையது. சோழமன்னர்களின் திருப்பணிகளைப் பெற்றுக் கலையழகோடு விளங்குவது. சுந்தரர் தேசம் உய்யத் திருத்தொண்டத்தொகை அருளிய பெருமையையும், அவர் பரவையாரோடு கூடிமகிழ்ந்து வாழ்ந்து அவர் தனது ஊராகவே கருதிப் போற்றிய புகழையும் உடையது. திருமகள் வழிபட்ட சிறப்புடையது.

### தலச்சிறப்பு :

இறைவன் ஐம்பெரும் பூதங்களின் வடிவினனுதலைத் தெரிவிக்கும் ஐந்து தலங்களில் பிருதிவித் (மண்) தலம் திருவாரூர்.

இங்குள்ள பெருமான் பிருதிவியாக இருப்பவர். வன்மீகநாதர், என வடமொழியிலும், புற்றிடங்கொண்ட பெருமான் எனத் தமிழிலும் இவர் திருப்பெயரை மக்கள் வழங்கிப் போற்றுவர். முத்தித் தலங்களாகத் திருவாரூர், தில்லை, திருவண்ணாமலை, காசி முதலிய தலங்களைப் போற்றுவர் பெரியோர். திருவாரூர், பிறக்க முத்திதருவது. இறந்தவர்பிறவாப்பெரும்பதி, எனக்கல்லாடமும் 'முத்தியங் குதித்தோர் எய்தும் பதியது' எனத் திருவிளையாடற் புராணமும் இத்தலத்தின் பெருமையைக் கூறுகின்றன 'திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்' என இத்தலத்தில் பிறந்தவர் அனைவரையும்சிவன் அடியவர்களாகச் சுந்தரர் போற்றியருளுகிறார். ஸ்ரீ குருஞானசம்பந்தரும் சிவபோகசாரத்தில் முத்தித்தலமாகத் திருவாரூரைக் குறிப்பிட்டருள்கிறார். சிறந்த தலங்கள் ஆறினை விராட்புருடனுக்குரிய ஆருதாரத்தலங்கள் எனக்கூறுவர் பெரியோர். இம்மண்ணுலகையே ஒருமனிதனுகப் பாவித்து அம்மனிதனுக்கு மூலதாரம், சுவாதிட்டானம் முதலிய ஆறு ஆதாரங்களாக ஆறு தலங்களைப் பாவித்து புராணங்கள் சிறப்பித்துக் கூறும். அவற்றுள் முதல் ஆதாரமாகிய மூலாதாரத் தலமாகத் திருவாரூர் விளங்குவது.

**தியாகத்துக்கு ஒரு ராஜா :**

திருவாரூருக்குத் தனிப்பெருமை தருபவர் தியாகேசர். தில்லையில் நடராஜா சிறப்புடையவராக விளங்குதல்போலத் திருவாரூரில் தியாகராஜா சிறந்த மூர்த்தியாகப் போற்றப்படுகிறார். முசுகுந்தச் சோழமன்னன் தேவேந்திரனிடமிருந்து பெற்று வந்து தாபித்த மூர்த்தி இவர். அம்மன்னனுல் கொண்டுவரப்பட்ட ஏனைய தியாகேசர்கள் திருவாரூரைச்சூழவுள்ள ஆறு திருத்தலங்களில் அம்மன்னனுல் தாபிக்கப் பெற்றுள்ளனர். உளியால் செதுக்கப்பெருமல் தானே உருவான மூர்த்திகளாக இவர்கள் விளங்குதலால் சப்தவிடங்கர்கள் எனவும் அவர்கள் எழுந்தருளிய தலங்களைச் சப்தவிடங்கத் தலங்கள் எனவும் கூறுவர். சப்த விடங்கத் தலங்களில் தலைமையானது திருவாரூர். இங்குள்ள தியாகர் வீதிவிடங்கத் தியாகர் எனப்பெறுவார். அம்மன்னன் தியாகேசருக்குச் செய்த அருச்சனை முசுகுந்தார்ச்சனை எனவும், மாலை வழிபாடு திருவந்திக்காப்பு எனவும் இத்தலத்தில் போற்றப்பெறும்.

இத்தலத்திற்கு மூவர் அருளிய 34 தேவாரத்திருப்பதிகங்கள் உள்ளன. பன்னிரு திருமுறைகளிலும் இடம் பெற்றுள்ள சிறப்பு இத்தலத்திற்கு உண்டு. சுந்தரர் பொருட்டு இத்திருத்தலத்தில் பெருமான் இயற்றிய திருவிளையாடல்களைச் சமய

உலகம் நன்கறியும். திருமுதுகுன்றத்தில் மணிமுத்தாற்றில் இட்ட பொன்னைச் சுந்தரர் இங்குள்ள கமலாலயத்தில் எடுத்ததையும் சுந்தரர் பரவையார் ஊடலில் பெருமானே நள்ளிரவில் ஒருமுறைக்கு இருமுறை தூது சென்றதையும் அறியாதார் யார் ?

நமிநந்தி அடிகள், தண்டியடிகள் முதலிய நாயன்மார்கள் வாழ்ந்த சிறப்பும் விறன்மிண்டநாயனுர், செருத்துணைநாயனுர் கழற்சிங்கநாயனுர் முத்தி பெற்ற பெருமையும் இத்தலத்திற்கு உண்டு.

## திருப்பணித் தொடக்கம் :

சோழப் பெருவேந்தர்களாலும், தருமபுர ஆதீனத்தாலும் அபிடேகக்கட்டளை, அன்னதானக்கட்டளை, அர்த்தஜாமக் கட்டளை முதலிய 13கட்டளைகளாலும் போற்றிப்புரக்கப்பெற்று வரும் இத்திருவாரூர்க்கோயில் இன்று பொலிவுகுன்றி, பெருந் திருப்பணியை எதிர்நோக்கி நிற்கிறது. கோயில் ஐந்துவேலி, குளம் ( கமலாலயம் ) ஐந்துவேலி ஓடை ( செங்கழுநீர் ஓடை ) ஐந்துவேலி என்பர். நான்கு இராஜகோபுரங்களோடும், ஐந்து திருச்சுற்றுக்களோடும், ஏராளமான சுற்றுக் கோயில்களோடும் விளங்கும் இம்மிகப்பெரிய ஆலயத்தைப் புதுப்பித்துக் குடமுழுக்குச் செய்யவேண்டிய மாபெரும் பொறுப்பு சைவ சமய அன்பர்கள் ஒவ்வொருவருக்கும் உண்டு. நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாகத் திருப்பணி இன்றிக் கலை அழகுகுன்றி நிற்கும் இத்திருக்கோயில் திருப்பணியைத் **தருமை ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தமது திருக்கரங்களால் 23 — 1 — 1984 அன்று தொடங்கி வைத்து தெற்குக்கோபுரத் திருப் பணியும், புதிதாக எழுப்பப்படும் தோரணவாயில்** திருப்பணியும் இராசன்கட்டளைச் சார்பில்செய்வதாகத்திருவுளம் பற்றினுர்கள். அபிஷேகக் கட்டளை, அன்னதானக் கட்டளை களின் பரம்பரை அறங்காவலர் வேளாக்குறிச்சியாதீனம் மகாசந்நிதானம் அவர்கள் தமது கட்டளைகளின் சார்பில் ரூ. 50,000ம் உதவுதாக வாக்களித்தார்கள். ஏறத்தாழ 30 லட்சம் ரூபாய் மதிப்பீட்டில் நடைபெற இருக்கும் இத்திருப்பணிக்கு எனத் தனிக்குழு ஒன்று அமைக்கப்பெற்றுள்ளது. தமிழ்நாடு

அரசு கரும்புப் பண்ணைக் கழகத்தலைவரும், இத்திருக்கோயி லின் அறங்காவலர் குழுத்தலைவரும் செயல் வீரருமாகிய அன்பர் திரு. சு. தென்கோவன் அவர்கள் திருப்பணிக் குழுவின் தலைவராக இருந்து இப்பணி விரைவில் நிறை வேறப் பெரிதும் முயன்று வருகின்றார்கள். உள் துறைக் கட்டளை பரம்பரை அறங்காவலர் வீ. டி. சோமசுந்தர முதலியா ரவர்களும் திரு. R. தக்ஷிணமூர்த்தி முதலியாரவர்களும் நிர்வாக அலுவலர் திரு. கண்ணபிரான் அவர்களும் ஆர்வத்துடன், அரும்பணியாற்றிவருகிறார்கள். அன்பர் பலரும், திருக்கோயில் இராஜகோபுரம், நூற்றுக்கால் மண்டபம், சுற்றுக்கோயில்கள் என ஏதேனும் ஒன்றின் திருப்பணியைத் தம் பொறுப்பில் ஏற்று நிறைவேற்ற முன் வருதல் பெரிதும் விரும்பத்தக்கது. செல்வர் களும், அன்பர்களும் இம்மாபெரும் திருப்பணியில் தங்களை உரியவாறு ஈடுபடுத்திக்கொண்டு திருவருள்பெற்று உய்ய ஞானசம்பந்தம் அன்புடன் வேண்டுகோள் விடுக்கிறது.

தியாகத்துக்கு ஒரு ராஜா : தியாகராஜா ! இப்பெருமானின் திருக்கோயில் திருப்பணிக்கு நாமும் சிறிது பொருள் தியாகம் செய்து அருள்தாகம் தீர்ப்போம் திருவருள் பெற்று அரச வாழ்வு வாழ்வோம் !!

ஆரூரமர்ந்த அரசே போற்றி.
சீரார் திருவையாறு போற்றி.



உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் திருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை
அருள்மிகு தாயுமான சுவாமி திருக்கோயில்
நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற
திருச்சி. திருநெறிய தமிழிசை மன்றத்தின்
பத்தாம் ஆண்டு நிறைவு விழாவில்
வழங்கியருளிய

# ஆசியுரை

1—1—1984

" மட்டுவார் குழலா ளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறும் இறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னருளே செயும்
சிட்டர் போலும் சிராப்பள்ளிச் செல்வரே "

## தெய்வ பக்தியும் தேச பக்தியும் :

தெய்வபக்தியும் தேசபக்தியும் இருகண்கள் போன்றவை. இரண்டு கண்களும் ஒன்றையே நோக்குவது போல இவ்விரண்டும் ஒருகுறிக்கோளையே உடையன. அதுதான் ஒருமைப் பாட்டை உணர்த்துவது; தெய்வபக்தி அகவாழ்வில் ஒருமைப் பாட்டை உணர்த்துவது; தேசபக்தி புறவாழ்வில் ஒருமைப்பாட்டை வளர்ப்பது. தெய்வபக்தி உடலில் உள்ள கருவிகளை ஒருமுகப்படுத்தி அதன்வழி உயிர்ஈடேற்றம் காணச்செய்வது தேசபக்தி நாட்டிலிலுள்ள பிரிவினைகளை மறந்துஒன்றுபட்டுமக்கள்; மகிழ்வுடன் வாழ வழி செய்வது. இவ்வகையில் தெய்வபக்தியும்

தேசபக்தியும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கும் தகையன. உண்மையான தேசபக்தன் தெய்வ பக்தியுடையவனுகவும் உண்மையான தெய்வபக்தன் தேசபக்தியுடையவனுகவும் இருப்பான். தெய்வபக்தி உணர்த்தும் ஒருமைப்பாட்டினைத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சுந்தரரும் தம் வாழ் வாலும் வாக்காலும் உணர்த்தினர். தேசபக்தி காட்டும் ஒருமைப்பாட்டினைப் பாரதியார் போன்ற தேசியக் கவிஞர்கள் அறிவுறுத்தினர் இவ்விரண்டில் முதற்கண் தெய்வபக்தி குறித்துச் சிந்திப்போம்.

## தெய்வபக்தியில் ஒருமைப்பாடு :

இன்று, நாட்டில் பலரும் ஒருமைப்பாடு குறித்துப் பேசி வருகின்றனர். பேச்சில் ஒருமைப்பாடு இருக்கிறதே தவிர செயலில் இல்லை. நாளுக்குநாள் அது தேய்ந்துகொண்டே போகிறது. நாட்டிலும் வீட்டிலும் சமுதாயத்திலும் பிரிவினையே நடைமுறையாகிவருகிறது. இப்போக்கு நாட்டிற்கு நல்லதல்ல. தெய்வ பக்தியில் ஒருமைப்பாடு என்பது மனிதனிடத்திலுள்ள ஆறுவகை சக்திகளும் ஒன்றுபடுதல் ஆகும். கண், காது, மூக்கு, நா, மெய், மனம் ஆகிய ஆறுவகையான சக்திகள் மனிதனிடத்தே செயல் படுகின்றன. இவை ஆறையும் ஒருமுகப்படுத்தினுல்தான் உயிர் ஈடேற்றம் அடைய முடியும். இந்த ஆறும் உயிருக்குத் துணை செய்ய வந்தனவே அல்லாது இடையூறு செய்வதற்கு அல்ல. இத்தகைய இவை ஆறும் ஒருமுகப் படாமல் பூஜை செய்வது சிறப்பல்ல என்று பட்டினத்தடிகள் அருள்கின்றுர்.

“ கையொன்று செய்ய விழியொன்று
நாடக்கருத்தொன் றெண்ண
பொய்யொன்று வஞ்சக நாவொன்று
பேசப் புலால் கமழும்
மெய் யொன்று சாரச் செவியொன்று
கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ்வாறு கொள்
வாய்வினை தீர்த்தவனே ”

என்னும் பாடலில் மன ஒருமைப்பாடு இன்றிப்பூஜை செய்யின் அதனை இறைவன் எப்படி ஏற்பான் என்று அடிகள் கேட் கின்றுர். மனம் என்பது, மனிதனுக்கேயுண்டு. அதன் அடிப் படையிலேயே மனிதன் என்று அழைக்கப்படுகிறுன். விலங்கு

களுக்கும் மனம் உண்டு எனினும் நல்லது தீயது என்பதை அறிந்துகொள்ளும் அளவிற்கு மனவளர்ச்சி அவற்றிற்கு இல்லை. உயிர், மனம் எனும் ஒன்றின் மூலமே ஐம்பொறிகளையும் ஆளுகின்றது. ஆள்வது உயிர்; ஆள்வதற்குத் துணை நிற்பது மனம்; ஆளப்படுபவை மெய், வாய், கண், மூக்கு, செவிகளாகிய பொறிகளும் அப்பொறிவழித் தோன்றும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்னும் புலன்களுமாகும் என்பதை உணர்தல் அவசியம்.

## உயிருக்குத் துணை மனம் :

உயிர் ஐந்து கருவிகளால் அறிவைப் பெறுகின்றது. கண்ணால் காண்கின்ற அறிவையும், காதால் கேட்கின்ற அறிவையும், மூக்கால் முகர்கின்ற அறிவையும், நாவால் சுவைக்கின்ற அறிவையும், மெய்யால் உற்றுணர்கின்ற அறிவையும் பெறுகிறது. இவற்றைப் பெறுவது உயிராயினும், பெற்றுத் தருவது மனம் ஆகும். மனத்தின் வழியே உயிர் அனுபவிக்கிறது. எனவே உயிர் உய்திபெற-நல்லது தீயது அறிந்து நல்வழிப்பட மனம், நல்லதாக அமைதல் வேண்டும். மனம், நல்மனமாக அமைய சத்துவகுணம், ரஜோகுணம், தாமோகுணம் என்னும் மூன்றில் சத்துவகுணம் மேலோங்கி நிற்றல் வேண்டும். அப்போது தான் ஐம்பொறிகளின் வழி வருகின்ற ஐம்புலன்களும் ஒருமுகப்படும். அந்த ஒருமைப்பாடு வருகின்றபோது ஆன்மாவிற்கு உய்திகிடைக்கிறது. இதனைத் திருஞானசம்பந்தர் எடுத்த எடுப்பிலேயே, " தோடுடைய செவியன்..." என்றுதொடங்கும் பதிகத்தின் இறுதிப்பாடலில் அருள்கின்றார்.

" ஒரு நெறிய மனம்வைத்துணர் ஞானசம்பந்தன் னுரைசெய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே "

அலைந்து திரியும் மனத்தை ஒருநெறிப்படுத்துதல் வேண்டும் என்றும், அங்ஙனம் ஒருநெறிப்படுத்த உதவும் தமிழே திருநெறிய தமிழ் என்றும் இத்தமிழ் வல்லவர் வினைகள் தீர்தல் எளிதாகும் என்றும் அருள்கின்றார்.

## அப்பரின் அனுபவம் :

திருநாவுக்கரசரும், தில்லைப் பதிகத்தில்,
" ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை "

என்று அருள்கின்றார். ஒன்றியிருந்து நினைதலே ஒருமைப்பாடு

ஆகும். இதனை ஆங்கிலத்தில், "Concentration" என்பர். இந்த ஒருமைப்பாட்டினால் என்ன பயன்? எனில், தொல்வினைகள் தீர்தல் எளிதாகும் என்று திருஞானசம்பந்தர் அருள்வதுபோன்று திருநாவுக்கரசரும் உங்களுக்கு ஒருகுறையும் வாராது என்றருள்கின்றார். இதற்கு மேற்கோளும் தருகின்றார்.

"கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவர்க்கா"

என்று அருள்கின்றார். இங்கு மார்க்கண்டேயரின் மன ஒருமைப்பாடும் அதற்கு ஆண்டவன் அளித்த பரிசும் நினைவு படுத்தப்படுகின்றன. மேலும், தில்லையில் ஆடும் நடராசப் பெருமானுடன் உரையாடலாம் என்பதும் அவர் தரும் விளக்கமாகும். "என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே" என்பது அக்குறிப்புணர்த்தும் வரி. என்று வந்தாய் என்பதில் எப்பொழுது வந்தாய்? என்னும் குறிப்பும், எதற்கு வந்தாய்? என்னும் குறிப்பும் அடங்கியுள்ளன. இதனை உளங்கொண்ட அப்பர் பெருமான் பிறிதொரு பாடலில் வேறு எது கருதியும் வரவில்லை; உன்னைக்கண்டு வழிபடவே வந்தேன் என்றருள்கின்றார்.

"அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்தவாறே"

என்பது அப்பொருளுடைய வரி. இந்த குறிப்புப் பெரிய புராணத்தால் தெரிய வருகிறது.

**ஒன்றிய வழிபாடு :**

சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தில்லைசென்று இறைவனை வழிபாடு செய்த பொழுது, ஐந்து பொறிகளின் வழியேவரும் அறிவும் கண்களே கொள்ள வழிபட்டார் என்று சேக்கிழார் குறித்தருள்கின்றார்.

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
[ அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக்குணம் ஒருமூன்றும்
[ திருந்துசாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும்
[ ஆனந்த எல்லையில் தனிப்பெருங்கூத்தின்
வந்தபேர் இன்பவெள்ளத் துள்திளைத்து
[ மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்"

என்பது அப்பாடல். கண்ணைத்தவிர, எஞ்சிய நான்கு

பொறிகளும் தம் செயல் இழந்து, கண்ணின் புலனில் ஒன்றி விட கண்டு வழிபட்டார் சுந்தரர் என்பது சேக்கிழார் காட்டும் காட்சி. அதுபோலவே மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கில் மனம் பற்றும் சிந்தனையில் எஞ்சிய மூன்றும் இணையவும், சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் எனும் மூன்று குணங்களில் சத்துவ குணத்தில் எஞ்சிய இரண்டும் ஒன்றுபடவும் அவர் வழிபாடு செய்தார் என்கின்றனர். கண் முதலான ஐம்பொறிகளும் கண்ணால் காணக்கூடிய புறக் கருவிகள்; மனம் முதலான நான்கும், குணங்கள் மூன்றும் கருத்தால் அறியக்கூடிய அகக்கருவிகள். இங்ஙனம் இருதிறக் கருவிகளும் ஒன்றியிருந்து வழிபடுதலே வழிபாடாகும். இது சுந்தரரின் அனுபவ வெளிப்பாடாக மலர்கிறது.

## மரபுநெறியில் ஓதுக :

இத்தகைய ஒருநெறிய வழிபாட்டால் சுந்தரர் மாறிலா மகிழ்ச்சியில் திளைத்திருந்தார். சமய குரவர் மூவரும் தம் வாழ்விலும் வாக்கிலும், ஒன்றியிருந்து வழிபடுவதை வற்புறுத்தியும், அனுபவமாக உணர்ந்ததை விளக்கியும் அவ் வழிபாட்டால் கிடைத்த பலனை உணர்த்தியும் அருளியுள்ளனர். இந்த அரிய பெரிய நெறியை எங்கும் மலரச் செய்ய வேண்டியது அனைவரின் கடமையாகும். திருச்சி திருநெறிய தமிழிசை மன்றத்தினர் இந்தச் செயலை எண்ணிச் செய்து வருவது பாராட்டுதற்குரியது. இம்மன்றத்தினர் மாதம் ஒருநாள் திருமுறை ஓதுவார்களை அழைத்துப் பண்ணுடன் ஓதச்செய்து வருகின்றனர். திருமுறைகளை அவற்றிற்குரிய பண்களில் அமைத்துப் பாடுதலே முறையாகும், சிறப்புமாகும். அதனை விடுத்து மக்களை ரசிக்க வைக்கும் நோக்கில் சில மெல்லிசை வண்ண மெட்டுக்களை அமைத்துப் பாடுதல் முறையாகாது. இப்படிப் பாடினால்தான் மக்கள் கேட்கின்றனர் என்று சிலர் கூறுகின்றனர். இது தவறு. நாம் ஆண்டவனின் திருமுன்பு, அவரின் திருவுள்ளம் மகிழ அவரின் திருச்செவி கேட்கும் நிலையில் பாடுதலையே குறிக்கோளாகக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கொண்டு முன்னோர் நெறியில் நின்று பண் மாறாமல் பாடினால் மக்களும் ரசிப்பார்கள். நாம் இறைக்கும் நீர், நெல்லுக்கு என்று பாய்ச்சினால் அதன் வழியே புல்லும் பயன்பெற்று வளர்வதுபோல, நாம் பாடும் பாசுரங்கள் இறைவனுக்கு என்று எண்ணி ஓதினால் அதனை மக்களும் கேட்டு ரசிப்பர். அங்ஙனமின்றிப் புல்லுக்கே நீர் பாய்ச்சுவது போன்று மக்களின் ரசனையையே குறிக்கோளாகக் கொண்டு முன்னோர் வகுத்த பண் அமைப்பிலிருந்து மாறி ஓதுதல்

பெருங்குற்றமாகும். இதனால்தான் இறைவன் திருச்செவியில் இப்பாசுரங்கள் சேரவேண்டும் என்று கருதிய திருஞான சம்பந்தர், தொடக்கத்திலேயே திருச்செவியினைச் சிறப்பித்துப் பாடுகின்றார் என்று கூறுவார் சேக்கிழார்.

> " எல்லையிலா மறைமுதல்மெய் யுடன் எடுத்த எழுதுமறை
> மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க்
> [ குரைசிறப்பப்
> பல்லுயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
> செல்லுமுறை பெறுதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து "

என்பது அப்பாடல்.

உரிய பண்ணில் பாடினால் ரசனை இருக்காது என்று கூறி வருகின்றனர். ஏன் ரசனை இருக்காது? இப்பொழுது சில பாசுரங்களை உரிய பண்ணில் பாடும்போது கேட்டுப்பாருங்கள். இந்த ஊர் தாயுமானப் பெருமானின் மீது அப்பரடிகள் பாடியபாடல், "மட்டுவார் குழலாள்" என்று தொடங்கும் குறுந்தொகைப் பாடலாகும் இதனை நாத நாமக் கிரியை எனும் ராகத்தில் பாடவேண்டும். நாத நாமக் கிரியை என்பது, சரிகமபதநி என்னும் ஏழு சுரங்களில் வைத்து உச்ச ஸ்தாயியில் ' ஸ ' பேசாமல் பாடுதல் வேண்டும். மேல் சட்ஜம் பேசினால் அது மாயாமாளவ கௌளை ராகமாகப் போய்விடும். இங்ஙனம் முன்னோர் வகுத்த நெறியில் நின்று பாடுதலே ஒருமைப்பாட்டிற்கும் தியானத்திற்கும் உகந்ததாகும். வேறு விதமாகப் பாடுவதெல்லாம், கரும்பு இருக்க இரும்பு கடித்து எய்த்தல் போன்றதே ஆகும்.

## தேசிய ஒருமைப்பாடு :

இங்ஙனம் அகவாழ்வில் உடம்பின்கண் அமைந்துள்ள கருவிகளின் ஒருமைப்பாட்டினால் கிடைக்கும் ஆன்ம பலன் பற்றிச் சிந்தித்தது போன்று புறவாழ்வில் நாட்டளவில் அனைவரும் ஒன்றுபட்டு வாழ்தலையும் சிந்தித்தல் தக்கதாகும்.

இந்தியா என்பது ஒருபெரிய தேசம். இது, பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பழமை வாய்த்த பெருநாடு. முற்காலத்தில் இது பல பிரிவுகளாகப் பிரிந்து ஆளப்பட்டுவந்தது. சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் தமிழ் நாட்டளவில் பிரிந்து நின்று தங்கள் தங்கள் பகுதியைக் குறுகிய வட்டத்திலிருந்து ஆண்டு வந்தனர். இப்படிச் சிதறுண்டு கிடந்த ஒன்று, ஆங்கிலேயர் ஆட்சியில் இணைந்து இந்தியா எனும் ஒரு பெரு நாடாக உருவாயிற்று. இத்தகைய நாட்டில் அந்நியரை

வெளியேற்றி விட்டு நம்மை நாமே சுதந்திரமாக ஆளத் தொடங்கியிருக்கிறோம் நமக்குள்ளேயே மொழியளவிலும் இன அளவிலும், சமய அளவிலும் அடித்துக் கொள்ளுவதற்கு அல்ல என்பதை இந்தியர்கள் அனைவரும் உணர்தல்வேண்டும். எந்த மொழி பேசுவோரானாலும், எந்த இனத்தைச் சார்ந்தவரானாலும், எந்தச் சமயத்தைப் பின்பற்றுவோரானாலும் நான் ஓர் இந்தியன் என்ற எண்ணத்தில் ஒன்றுபட்டு வாழத்தலைப்படுதல் அவசியமாகும். இதனைமறந்து மனம் போன போக்கில் வாழ எண்ணினால், பிறரால் ஒரு காலத்தில் ஒன்று படுத்தப்பட்ட நாம், விரைவிலேயே பிரிந்து சீரழிந்து விடுவோம். இதனையே சுதந்திரப்போராட்டக் காலத்தில் தம் கவிதையினால் வீர முழக்கம் செய்த பாரதியார்,

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு — நம்மில்
ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வு"

என்று பாடினார். நமக்குள் எத்தனையோ பிரச்சினைகள் இருக்கலாம்; எத்தனையோபிரிவுகள் இருக்கலாம். அதற்காக நாட்டைத் துண்டாடிவிடக்கூடாது. துண்டாடினால் இழப்பு அனைவருக்கும் தான். நாம் அனைவரும் ஒருவரே எனும்கருத்தில் பாரதியாரும்,

"முப்பது கோடி முகமுடையாள் — உயிர்
மொய்ம்புற ஒன்றுடையாள்
செப்புமொழி பதினெட்டுடையாள் — எனில்
சிந்தனை ஒன்றுடையாள்"

என்று கூறுகின்றார். நாம் பிறந்து மொழிபயின்ற நாடு, நமது நாடு என்னும் ஒருமைப்பாட்டு உணர்வு அனைவருக்கும் வருதல் அவசியம். நம் சொத்தை நாமே அழித்துவிடுதல் கூடாது இதனைப் பாரதியார்,

"பாரதநாடு பழம் பெரும்நாடு
நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்"

என்று மொழிகின்றார்.

எனவே ஒருமைப்பாடு, ஒருமைப்பாடு என்று மேடையில் மட்டும் கூறிப்பயனில்லை. உழக்கிலே கிழக்கு மேற்குப்பார்த்தால் உழக்கே உடைந்துவிடும் என்பதை எண்ணி நாட்டை எந்தக் காரணத்தைக் கொண்டும் யாரும் துண்டாட விடக் கூடாது. இன்று நாட்டில் உள்ள நடைமுறை என்ன? பஞ்சாப், ஒரிஸ்ஸா போன்ற மாநிலங்கள் பிரிவினைப் போக்கைக்

கொண்டிருப்பது நமது தேசத்திற்குக் கேடுவிளைவிப்பது ஆகும். இதற்கு யாரும் இடம் தருதல் கூடாது. இக்கருத்தை நாளும் சொல்லிவருதல் நமது கடமை; பின்பற்ற வேண்டியது பாரத தேசமக்களின் கடமை.

புறவாழ்வில் ஒருமைப்பாடு கொண்டு நாட்டுநலன் பெருகவும், அகவாழ்வில் ஒன்றியிருந்து ஆன்ம ஈடேற்றம் காணவும் உரிய கருத்துக்களை இன்று இங்குச் சிந்திக்க வைத்தது தாயுமானப் பெருமானின் திருவருளாகும்.

**வாழ்த்து :**

இத்தகைய விழாவை நடத்திய மன்றத்தினரின் பணியும், உடனிருந்து ஒத்துழைக்கும் திரு. ப. முக்கப்பிள்ளை திரு அருணாசலம் செட்டியார், திரு. முத்துக்கந்தசாமி தேசிகர் போன்றோர் பணிகளும் பாராட்டத்தக்கன. நாட்டுமக்கள் அனைவரும் தேசபக்தியும் தெய்வபக்தியும் கொண்டு ஒன்றுபட்டு வாழ்ந்து நலமும் வளமும் பெறுவார்களாக! இவற்றை எல்லாம் வழங்கியருள எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வளர்க தெய்வபக்தி ! வாழ்க தேசபக்தி !!



# ஆளுயர்

வித்துவான் திரு. கா. ம. கண்

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் 5—2—1984 ஆங்கிலமாத முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை.]

சரியான நேரத்தில் புறப்பட்டேன். என் வீட்டில் சினிமா சங்கீதம்; வானொலி வாயிலாக அலறிக் கொண்டிருந்தது!

என்ன இசை இது! போலி மயக்கம் தருகிறதே!

தேவாரமும் திருமுறைகளும் நமக்குத் தரும் சாந்தியை இந்தப் போலி இசை புகட்டி விடுமா என்ன?

தருமையாதீனம் திருமுறை இசை வளர்ச்சிக்கும் திருமுறைப் பதிப்புக்களின் வளர்ச்சிக்கும் செய்யும் அருட்கொடைகள் ஏராளம்! தாராளம்!!

உள்ளம் இசைபற்றி அசைபோடத் திருமடம் நோக்கி நடந்து வருகிறேன்.

காலம் தவறாமல் நடக்கிறது அருளுபதேசக் கூட்டம்! மணி 10.

திருநீறு பெற்று அணிவதும் குருமணிகளின் அருட் கோலத்தைத் தரிசிப்பதும் அலாதி இன்பம்!

இன்று – முதல் ஞாயிறு – பிப்பிரவரி – 5. ஆளுயர் வரலாறு உபதேசம்! இடையில் ஜனவரிமாத அருளுபதேசமாகத் திருச்சியில் திருமுறை விழாவில் குருநாதர் ஆசியுரை வழங்கி னார்கள்.

குருமணிகள் இதனைத் தம் திருவுளத்தே கொண்டார்கள் "டிசம்பர் மாதம் மானக்கஞ்சாறர் வரலாறும். தாயனார் வரலாறும் உபதேசித்தோம்; இரண்டு நாயனார் வரலாறுகள் உபதேசிக்கப் பட்டமையும் இடையே ஒருமாதம் இடையீடு பட்டமையும் மாதம் ஒரு வரலாறு என்ற முறையில் அமைந்தது இறையருளே போலும்!" என்றார்கள். அப்போது ஒரு தத்துவத்தையும் நம் மனம் கொள்வித்தார்கள்.

குறைபாடு - பின்னம் - இல்லாமல் எதனையும் செய்பவன் இறைவன். அதனாலேயே இறைவனைப் 'பின்னமறக் கூட்டும் பிரான்' என்றனர்.

குருமணிகள் எந்த ஒரு நிகழ்ச்சியையும் இறையருள் என்று கொண்டு எடுத்து உணர்த்திச் சமய உலகை வழிநடத்திவருகின்றார்கள்! உலகம் இந்நெறிபற்றி ஒழுகவேண்டும் என்பது அவர்கள் ஞானத்திருவுள்ளம்!

வேய்ங்குழலிலே திருஐந்தெழுத்தை வாசித்தமையும்-பசுக்களை மேய்த்துக் காத்தமையும் ஆனாயர் செய்த திருப்பணி.

குருமணிகள் இதுபற்றி அருளும்போது சைவ சமயத்தையும், வைணவத்தையும் ஒப்பிட்டார்கள். கண்ணன் குழல் ஊதினான்; விலங்குகளும் பறவைகளும் இன்னிசையில் மறந்து கிடந்தன.

ஆனாயரும் குழல் ஊதினார் - அந்த இசை பறவைகளையும் விலங்குகளையும் மெய்ம்மறந்து ஈடுபாடு கொள்ளச் செய்தது.

இப்படி ஆனாயரையும் கிருஷ்ணபகவானையும் ஒப்பிட்டருளியமை "வழிகள் பல; பொருள் ஒன்றே" என்ற உணர்வை ஊட்டிற்று.

ஆயனார் குழல் ஊதியபோது நிற்பனவும் நடப்பனவும் மெய்ம்மறந்து நின்றன. காற்றுக் கூட அசையவில்லை - ஒன்றுக்கொன்று பகையான பாம்பு மயில் கூட இசையில் மயங்கி ஒருங்குநின்றன.

இவ்வாறு ஆனாயர் வேய்ங்குழல் இசைகேட்ட பறவை மிருகங்களின் செயல் மறந்த நிலையைச் - சராசரங்களெல்லாம் தம் வசம் இழந்த நிலையைச் சேக்கிழார் அருளியவாறு விவரித்த குருமணிகள் நமக்கு ஓர் அறிவுரையும் அருளினார்கள்.

"மயக்கம் தேவையே! தாய்மார்களுக்குப் பிரசவக்காலத்தில் சிறிதளவு 'பிராந்தி' கொடுப்பார்கள்; அப்போதும் அது அதிகமானால் - சுகத்துக்குமாறாகத் துன்பத்தையே கொடுத்துவிடும். எதுவும் ஓர் அளவோடு இருக்கவேண்டும்".

இப்படி அருளிய குருநாதர் "இசை இறைவனுடைய அருளைப் பெறுதற்கு உரிய ஒன்று. நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் பயன் தரும். அதுபோல இசை இறைவனிடமிருந்து - அவனை வாழ்த்தவும் துதிக்கவும் வந்தது; மக்கள் இன்பத்திற்கும் அது துணையாகின்றது". என்ற தத்துவத்தை உணர்த்தினார்கள்.

( தொடர்ச்சி 177 ஆம் பக்கம் பார்க்க. )

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M. A., B. Lit., D. P. P. A., D. U. N., I. U.
பருத்தியூர்.

**தவளே இவள்; எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்,**
**அவளே அவர்தமக் கன்னியும் ஆயினள்; ஆகையினால்**
**இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்;**
**துவளேன் இனியொரு தெய்வமுண்டாக மெய்த் தொண்டு**
**[ செய்தே. 44**

## அ. தவளே இவள்

(1) இவ்வபிராமியே தவத்தின் வடிவானவள். தவத்தின் தலைவி அல்லது தவத்தைப் புரிபவள்.

(2) தவத்தின் இலக்காகவும், தவத்தின் உருவாகவும் இருக்கும் அன்னையே, தாட்சாயணியாகவும், பார்வதியாகவும், காமாட்சியாகவும், கற்பக வல்லியாகவும், கன்னியா குமரியாக வும் தவம் இயற்றியுள்ளாள்.

(3) "அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை", "ஆருயிர் ஆயும் அருந்தவப் பெண்பிள்ளை", தவத்தின்தலைவி" "தொலைவில் தவஞ் செய்தாய் நெறித் தோகை", "இனிய் தென்மூலை இருக்கும் குமரி", என்றெல்லாம் தவத்தோடு அவளுக்கியைந்த தொடர்பினைத் திருமந்திரம் குறிப்பிடுகிறது.

(4) சிவச்சிந்தையும் சிவத்தொண்டுமே சிறந்த தவநெறி யாகும். எப்போதும் இறைவனின் அருகில் இருந்து தொண் டாற்றி, அவனையே இடையறாது சிந்தையில் கொண்டிருப்பதால் அவள் 'தவளே' யாவாள்.

(5) குண்டலினி யோகமும் ஒருவகைத் தவமேயாகும்.

"சடங்கது செய்து தவம் புரிவார்கள்
கடந்தனிலுள்ளே கருதுவராகில்
தொடர்ந்தெழு சோதி துளைவழி ஏறி
அடங்கும் அன்பின தாயிழைபாலே"

என்னும் திருமந்திரம் அவ்வியோகத் தவத்தினைக் குறிப்பிடுகிறது. அத்தவயோகத்தின் தலைவியாய் நின்று அதனைக் கூட்டுவிப்பவளைத் 'தவளே' என்றார்.

## ஆ. எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்.

(1) எங்கள் சிவபெருமானது மங்கல மனைவியும் அவளே.

(2) 'மங்கலம் என்ப மனைமாட்சி' என்பதற்கேற்ப 'மனைமங்கலம்' என்று அழகுபடக்கூறினர். விளக்கு, பசு, கண்ணாடி முதலியவற்றினை மனையில் இருக்கும் மங்கலப் பொருள்கள் என்று கொண்டாடுவது போல் மனைவியினையும் 'மனைமங்கலம்' என்று அழைத்த நமது சமய நெறியின் உயர்வும், பெண்ணினத்துக்கு நம் முன்னோர் கொடுத்த ஏற்றமும் சிந்தித்து மகிழற்குரியதாகும். 'சங்கரன்' என்றசொல் 'மங்கலத்தைச் செய்பவன்', 'நன்மையினைப் புரிபவன்' என்றெல்லாம் பொருள் தரும். மங்கலத்தைச் செய்பவனுக்குத் தானும் மனைமங்கலமாய் நின்று உயிர்களுக்கு நன்மையே புரிபவள் அம்பிகை.

(3) 'சதாசிவ பதிவ்ரதா' – 'சதாசிவனின் மனைவி, என்று சகஸ்ரநாமம் புகழுகிறது. இந்த நாமத்துக்கு முன்னும் பின்னும் அமைத்துள்ள இரண்டு நாமங்களும் இதனோடு தொடர்புடையனவேயாகும். அவற்றின் விரிவினை "அவளே அவர் தமக் கன்னையும் ஆயினள்" என்ற பகுதியின் விளக்கத்தின் நிறைவாக அறிந்து கொள்வது தெளிவினைத்தரும்.

## இ. அவளே அவர்தமக்கு அன்னையும் ஆயினள்

(1) அவ்வாறு இறைவனின் மங்கல நாயகியாக விளங்கும் அவளே இறைவனுக்குச்சில சந்தர்ப்பங்களில் அன்னையாகவும் ஆகிறாள். மனைவியாய் இருப்பவளே அன்னையும் ஆவது எங்ஙனம்? சித்தாந்த வழியாகவும், உலகியல் வழியாகவும், புராண வரலாறுகள் வழியாகவும் இக்கருத்தினை ஆய்வோம்.

### சித்தாந்த வழியான விளக்கங்கள்.

(2) விதைத்த விதையினின்று செடி தோன்றுகிறது. அதே செடியினின்று விதை தோன்றுகிறது. அதனின்று மீண்டும் விதை தோன்றுகின்றது. "செடிக்கு விதை தாய், பின் விதைக்கு செடி தாய்" இவ்வாறு உயிரியல் சுழற்சி நடைபெறுகிறது. அதுபோல் சிருஷ்டியின் காரணமாக சிவத்தினின்று சக்தியும், சக்தியினின்று சிவமும் தோன்றுதல் உண்டு. விதையா? செடியா? எது முதலில் தோன்றியது? என்பது ஆய்வுக்கும் அறிவுக்கும் எட்டாத முடிவற்ற வினாவாகவே நிற்கிறது. அங்ஙனமே இரண்டல்லாத சிவசக்தி சிருஷ்டி காரணமாக

பிரிந்தும், விரிந்தும், இணைந்தும், கிளைத்தும் செயல்படுகின்றன. இச்செயல்பாடுகளைத் திருமந்திரம் போன்ற நூல்கள் விளக்குகின்றன

(3) "வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும் தாரமுமாமே"

எனத் திருமந்திரம் அவர்களின் கடந்து நின்ற நிலைகளைக் கூறி, உறவாகும் முறைமையினையும் குறிப்பிடுகிறது.

(4) "இமவான் மகட்கு தன்னுடைக் கேள்வன் மகன், தகப்பன், தமயன்" என்கிறது திருவாசகம். சக்தி இமவான் பெண்ணான பொழுது அவளை மணந்ததால் இறைவன் கணவனாகிறான். பராசக்தியினின்று சிவ சைதன்யம் தோன்றுவதால் சிவன் சக்திக்கு மகன் ஆகிறான் சக்திக்குப் பிறப்பிடம் சிவமாய் இருப்பதால் இறைவன் அவளுக்கு தகப்பன் ஆகிறான். தோற்றத்துக்கு வருகிற சக்திக்கு முன்பே சிவம் இருப்பதால் அவன் சக்திக்கு 'அண்ணன்' ஆகிறான்.

(5) "சிவம் சக்திதன்னை ஈன்றும்
சக்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்து இருவரும் புணர்ந்து இங்கு
உலகுயிர் எல்லாம் ஈன்றும்
பவன் பிரமசாரி ஆகும்;
பான்மொழி கன்னி யாகும்;
தவம் தரு ஞானத் தோர்க்கு இத்
தன்மைதான் தெரியும் அன்றே"

என்ற சிவஞான சித்தியார் சூத்திரம் சிவசக்தி பரஸ்பரம் தங்களை ஈன்றும் பின் உலகினை ஈன்றும் அவர்கள் முறையே பிரம்மசாரியாகவும், கன்னியாகவும் இருக்கும் தன்மையினைக் குறிப்பிடுகிறது. "இது என்ன தத்துவங்கள்? ஏதும் விளங்கவில்லையே!" எனச் சிலர் எண்ணக்கூடும். அதனையும் சித்தியார் குறிப்பிடுகிறது. "தவந்தரு ஞானத்தோர்க்கு இத் தன்மைதான் தெரியும் அன்றே" என்ற அடியால், இத் தத்துவத்தைத் தெளிவாக உணரத் தவப்பயனால் கிட்டிய ஞானம் வேண்டும் என்கிறார் அருணந்தி சிவாச்சாரியார் அவர்கள். இச்சித்தாந்த சூத்திரத்துக்கு ஓர் இலக்கியம் வகுத்தாற்போல அபிராமி பட்டரும் அத் தத்துவங்களைக்கூறும் பாடலினை "தவளே!" என்ற சொல்லுடன் துவங்கும் நயம் நோக்கத்தக்கது.

## உலகியல் ( லௌகீக ) வழியான விளக்கங்கள்

(6) உலகியலில் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பின் மனைவியினைத் தாய்போல் எண்ணித் தூய வாழ்வு வாழ்வது மேன்மையான நெறியாகும். இராமகிருஷ்ண பரமஹம்சரும், காந்தியடிகளும் அது போன்ற வாழ்வு நடத்திக் காட்டியுள்ளனர். இறைவனது இல்லறம் அத்தகைய மேன்மையையுடையதாகையால் "அவளே, அவர் தமக்கு அன்னையும் ஆயினள்"

(7) 'தாய்க்குப் பின் தாரம்' என்பது பழமொழி. அதாவது பால் நினைந்தூட்டும் தாய்போல் கணவனின் பசிவேளையறிந்து உணவு வழங்குதல் போன்ற இயல்புகளைப் பெற்று மனைவி வாழவேண்டும். அல்லது எப்போதும் கணவனின் நலனிலேயே கருத்துடையவளாய் இருத்தல் வேண்டும். ஒருவனின் தாய் அப்படி நலனைப் பேணுகிறாள். பின்னால் அவனது மனைவி அந்த நிலைக்கு உயருகிறாள், அல்லது உயரவேண்டும். இதனையே இப்பழமொழி உணர்த்துகிறது. 'தாயுமிலி தந்தையிலி' யாகிய இறைவனின் மனைவி அப்படி உயர்ந்து 'அவளே அவர் தமக்கன்னையும் ஆயினள்'

(8) மற்றும் மனைவியின் பண்புகளை விளக்கும் பாடல் ஒன்று, மனைவி பள்ளியறையில் தாசியாகவும், ஆலோசனை வழங்குவதில் அமைச்சராகவும், நலனைப் பேணுவதில் தாயாகவும் இருக்கவேண்டுமென்று குறிப்பிடுகிறது. சதா சிவ பதிவிரதையாகிய அன்னை அங்ஙனம் அவர் தமக்கு அன்னையும் ஆவது வியப்பில்லை.

(9) இவ்வுலகியல் அநுபவத்தினைக் காலஞ்சென்ற கவிஞர் கண்ணதாசன் அவர்கள் அழகாகவும் எளிமையாகவும் விளக்கியுள்ளார். மனைவி தன் மனதினாலும், நினைவினாலும் தாயாக வேண்டும் என்பதனையும் அவளது அன்பினால் அவன் சேயாகினான் என்பதனையும்,

"மனதாலும் நினைவாலும் தாயாக வேண்டும் நீயாக வேண்டும்
மடிமீது விளையாடும் சேயாக வேண்டும் நானாக வேண்டும்"

என்கிறார். இது மிகப் பிரபலமான பாடல். எப்போதும் சிவச் சிந்தனை நிறைந்த மனதாலும் நினைவாலும் அவளே அவர் தமக்கு அன்னையும் ஆனது வியப்பில்லை.

## புராண வரலாறு வழியான விளக்கங்கள்

(10) 'அவளே அன்னை' என்னாது 'அவளே அன்னையும் ஆயினள்' என்கிறார். சில காரணங்களுக்காக, சில அருட்

செயல்களுக்காக அவளே அன்னையாக ஆனாள் என்பது அதனால் புலப்படுகிறது. அவ்வாறு அன்னையும் ஆன புராண வரலாறுகள் வருமாறு :-

(11) அநுசூயாதேவியின் கற்பின் பெருமையினை உலகுக்குக் காட்ட எண்ணிய மும்மூர்த்திகளும் அவளிடம் வந்து ஒரு வேளை உணவளிக்குமாறு வேண்டினர். அதிதியாக வந்து வேண்டியவர்களுக்கு உணவளிக்கத் தவறக்கூடாது என்று எண்ணிய அநுசூயை அங்ஙனமே உணவளிக்க ஒத்துக் கொண்டாள். ஆனால் மூவரும் அத்துடன் விடுவதாய் இல்லை. நாங்கள் திருவமுது புசிக்கும்போது பரிமாறுவோர் ஆடையின்றி இருந்தே பரிமாறவேண்டும் என்பது எங்கள் ' சம்பிரதாயம் ' என்றனர். அதற்கும் அநுசூயை பின் வாங்கவில்லை. " சரி! அப்படியே ஆகட்டும் " என்றாள். திருவமுதுண்ண மூவரும் அமர்ந்தனர். அநுசூயை தனது கற்பின் ஆற்றலால் மும்மூர்த்திகளையும் சிறு குழந்தைகளாக ஆக்கிவிட்டாள்! தங்கள் கணவன்மார்களை மீட்டுச் செல்ல மலைமகளும் கலைமகளும், அலைமகளும் அநுசூயையின் ஆச்ரமத்திற்கு வந்தனர். ' அம்மணி! எங்களது கணவன்மார்கள் எங்கே " என்றனர். ஒரே அச்சில் வார்த்தெடுத்தாற் போன்ற மூன்று குழந்தைகளுக்குள் சிறிதுவேறுபாடு கூடக்காணமுடியவில்லை. அநுசூயை அவர்களை அடையாளம் காட்ட, மூன்று தேவிகளும் முறையே தங்கள் கணவனை குழந்தையினைத் தூக்கிச் சென்றனர். பிறகு மூவரும் அநுசூயையின் கற்பினைப் பாராட்டிப் போற்றிச் செல்ல, மீண்டும் தம்முருவெய்தினர். அந்த நிலையில், அநுசூயைக்கு அருள் செய்த திருவிளையாட்டின்போது, சங்கரன் குழந்தையாக சங்கரி அவனைத் தாய்போல் எடுத்துச் சென்றாள். ஆகவே அவர் தமக்கு அன்னையும் ஆயினாள்.

(12) இராவணனைப் போலவே அவனது மனைவி மண்டோதரியும் சிறந்த சிவபக்தியுடையவள். தனது பூஜை அறையில் தினசரி இறைவனை மெய் மறந்து பூஜிப்பது அவள் வழக்கம். அவளது பக்திக்கேற்ற அருள்செய்ய வேண்டி இறைவனும் தினசரி மண்டோதரிமுன் ஒவ்வொரு திருக்கோலம் காட்டி மறைவது வழக்கம். ஒருநாள் அவ்வாறு அருள்செய்யும் பொழுது சிவபெருமான் கட்டழகமைந்த வாலிபனாகக் காட்சி தந்தான். கரங்கூப்பி அடிபணிந்த மண்டோதரியிடம் பல மெய்ஞ்ஞானக்கருத்துக்கள் பற்றிப்பேசவும் செய்தான். அந்த நேரம் இராவணன் போர்க்களத்தினின்று இல்லம் திரும்பினான். " மண்டோதரி! " என்று அழைத்தபடி பூஜை அறைக் கதவைத் தட்டினான். அங்கோ ஒரு வாலிபனின் குரல் கேட்கிறது!

கோதிப்படைந்த இராவணன் "யாரடா அங்கே?" என்றபடி வாளினை உருவினன். அந்தக்கணமே இறைவனின் வாலிபக் கோலம் மறைந்து விட்டது. சிறு குழந்தையொன்று சிரித்தபடி படுத்திருந்தது. (திருவிளையாடற்புராணம்-விருத்த குமாரபால ராளுபடலம் இதேபோன்ற வரலாற்றினைக்குறிப்பிடுதல் ஒப்புமை யாகும்.) மண்டோதரி கதவைத்திறந்தாள். இராவணன் குழந்தையினைக் கண்டான். "யார் இது?" என்றான். "ஒரு பெண்மணி இக்குழந்தையினை சிறிதுநேரம் பார்த்துக்கொள் ளும்படி அடைக்கலமாய்க்கொடுத்துச் சென்றாள்" என்றாள் மண்டோதரி. அச்சமயம் அங்குநுழைந்த புதியபெண்ணொருத்தி "மண்டோதரி! என்குழந்தையினைக் கொடு" எனக்கேட்டாள். "உங்கையிற் பிள்ளை மீண்டும் உனக்கே அடைக்கலம்", என்றபடி மண்டோதரி குழந்தையினை அவளிடம் அளித்தாள். அங்கு வந்த பெண்மணி வேறு யாருமல்ல! அம்பிகையேதான்! மண்டோதரிக்கு இறைவன் அருள்பாலிக்கும்பொழுது குழந்தை யாக வடிவெடுக்க, அவளே அவர்தமக்கு அன்னையும் ஆயினள். காலஞ்சென்றசித்தாந்தவித்தகர்கயப்பாக்கம் திரு.சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் "உங்கையிற்பிள்ளை" என்ற திருவெம் பாவை பாடலுக்குக் கூறும் விளக்கங்களில் இதுவும் ஒன்று.

(13) திருமாலின் அவதாரமாகிய ஹயக்கிரீவர் அகத்தியப் பெருமானுக்கு அன்னையின் சகஸ்ர நாமங்களை உபதேசிக்கத் துவங்கினர். 'ஸ்ரீமாதா' என்றார் ஹயக்கிரீவர். அகத்தியருக்கு உடனே ஐயம்! அன்னைவயிற்றில் தோன்றாது குடத்திலிருந்து தோன்றிய அவருக்கு 'ஸ்ரீமாதா' என்ற நாமத்தின் பொருள் விளங்க வில்லை. 'ஸ்ரீமாதா' என்றால் "சிறப்பு மிக்கதாய் அனைத்துக்கும் தாய் – கலைமகளுக்குத் தாய் – அலைமகளுக்குத் தாய் – சிறப்புடைய ஈசனுக்கும் சிருஷ்டி கிரமத்தால் தாய்", என்று விளக்கினர் ஹயக்கிரீவர். "ஆசிரியப் பெருமானே! மன்னிக்க வேண்டும் இறைவனுக்கு அம்பிகை மனைவி என்றீர் முன்பு இப்போது தாய் என்கிறீரே, அதனை விளக்க வேண்டும்" என்றார். அனைத்தும் அறிந்த அகத்தியமுனிவர் அங்ஙனம் வின வியதன் காரணம், பிற்காலத்தில் நம்போன்றோர் தெளிவு பெற வேண்டும்என்ற கருணையுள்ளமே என எண்ணுதல் வேண்டும். அப்போது ஓர் அசரீரி எழுந்தது. "அகத்தியரே நீர் 'தாரா பீடம்' வாரும்" என்றது. அகத்தியர் ஹயக்கிரீவர் உடன் வர வங்கம், பிகார் மாநில எல்லைப்பகுதியில் இருக்கும் 'தாரா பீடம்' என்ற சக்தி பீடத்துக்கு விரைந்தார். அங்கு சிவபெருமானைச்சிறு குழந்தையாக மடியில்கிடத்தியபடி அன்னை காட்சி தந்தாள். அதனைக் கண்ட அகத்தியர் 'ஸ்ரீமாதா' என்

சொல்லின் பொருளைத்தெளிவாக உணர்ந்தார். அகத்தியருக்குத் தெளிவு புகட்ட அவளே அவர் (சிவபெருமான்) தமக்கு அன்னையும் ஆயினள். சுற்றுலா மூலம் சிலவற்றைக் கற்கும் நவீனக் கல்விமுறை இவ்வரலாற்றில் காணப்படுகிறது.

(14) கர்நாடக மாநிலத்தில் தாருகன் என்னும் அரக்கன் ஒருவன் வாழ்ந்து வந்தான் அவனது கொடுமைகளிலிருந்து மக்களைக் காக்க தேவர்களின் வேண்டுகோளின்படி அன்னையினைச் சிவபெருமான் அங்கு அனுப்பினர். காளியின் வடிவந் தாங்கி தாருகனை வதைத்த அன்னை அந்த உக்கிரம் தணியாது பிற உயிர்களையும் வதைக்கத் துவங்கினள். மீண்டும் தேவர்கள் முறையிட்டனர். சிவபெருமான் அங்கு விரைந்தார். காளியின் உக்கிரத்தைத் தணிக்க தான் அவள்முன் சென்று சிறு குழந்தையின் வடிவத்துடன் கிடந்தார். அழகு கொஞ்சும் அக்குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டுமென்று எண்ணிய உக்கிர காளி அவ்வாறே முனைந்தாள். அப்போது குழந்தையாக வந்த இறைவன் பாலினைப் பருகுவது போல் காளியின் உக்கிரத்தை உட்கிரகித்து விட்டார். பாலகனாக வந்து, உக்கிரம் தணித்து க்ஷேத்திரத்தைக் (உலகினை) காத்ததால் அவருக்கு 'க்ஷேத்திர பாலர்' என்ற பெயர் உண்டாயிற்று. இவரே தீட்சை பெற்ற தேவி உபாஸகர்களுக்கு எப்போதும் தோன்றாத் துணையாக நின்று உதவுகிறார் என்பது ஸ்ரீவித்யா மரபு. அவளே அவர் தமக்கு அன்னையும் ஆகிய இவ்வரலாறு காளிகா புராணம் காட்டும் சான்று.

(15) சேர்க்கையினால் ஏற்படும் மாறுதல்களை 'உபாதி' என்பர். அன்னை அந்த சேர்க்கையால் ஏற்படும் மாறுதல்களுக்கு அப்பாற்பட்டவள். எனவே அவளை சகஸ்ரநாமம் முதலில் 'சர்வோபதி விநிர் முக்தா' என்றது. பின் 'சதாசிவ பதிவ்விரதை' எனக் கூறி சங்கரனார் மனைமங்கலம் என்றது ஏன் இந்த முறண்பாடு? காரணத்தை அடுத்து வரும் நாமம் விளக்குகிறது. "சம்பிரதா யேஸ்வரி" என்பது அது. அதாவது "அவள் மரபுகளுக்கு அல்லது தொன்று தொட்டு அடியார்கள் கூறும் சம்பிரதாயங்களுக்குத் தலைவி" என்றது. ஒவ்வொரு நிலையில் ஒவ்வொரு உறவு முறை கூறி அழைப்பது என்பது ஒரு சம்பிரதாயம் அல்லது மரபு மட்டுமே. இதுதான் உண்மை நிலை. ஓர் உருவம் ஓர் நாமம் இல்லாதவனுக்கு ஆயிரம் நாமம் கூறுவது போன்றது தான் இதுவும். "வம்பே பிறவியும்" என்று குறிப்பிடும் பாடலில் அபிராமி பட்டரும் இவை மரபுகளே என்பார்.

## ஈ. ஆகையினால் இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்.

(1) ஆகவே இவ்வபிராமியே கடவுளர் யாவரினும் மேம் பட்டவளும் தலைவியும் ஆவாள்.

(2) தவத்தின் தலைவியாதல் – இலக்காதல், சங்கரனின் மனை மங்கல மாதல், படைப்பு நிமித்தம் அயனுக்கே தாயாதல் ஆகிய காரணங்களால் இவளது 'பரத்வம்' அல்லது மேம்பாடு தெளிவாகியது. ஆகையினால் இவளே மேம்பட்ட இறைவியும் தலைவியும் ஆகிறாள் என்றவாறு. ஆகையினால் என்ற சொல் மேற்குறித்த காரணங்களைச் சுட்டி நின்றது.

(3) தவத்தின் இலக்கான மேல் நிலையில் இருத்தல், அவர் தமக்கு அன்னையாகிய படைப்புத்துவங்கிய நிலை, ஆகியவற்றி னைக்குறிக்குமிடத்து அன்னையினை ' அவள் ' என்று ' சேய்மைச் சுட்டி'லும், தான் உணர்ந்து மேலை இறைவி என அறிந்த நிலை யினைக் குறிக்குமிடத்து ' இவள் ' என்று ' அண்மைச் சுட்டி ' லும் குறிப்பிட்டார்.

## உ. துவளேன் இனியொரு தெய்வம் உண்டாக மெய்த் தொண்டு செய்தே !

(1) இனிமேல் வேறு ஒரு தெய்வம் இருக்கிற தென்று கருதி மெய்த் தொண்டாற்றித் தளர மாட்டேன் என்கிறார்.

(2) அன்னையின் பரத்வமும், மகத்துவமும் அறிந்துதெளிந் தபின் வேறு தெய்வங்கள் இருப்பதாக எண்ணித் தொண்டு செய்யத் தேவையில்லை என்கிறார். உடலால் செய்யும் தொண்டு என்றும் உண்மையான தொண்டு என்றும் ' மெய்த்தொண்டு ' என்ற சொல் இருபொருள் தந்து நிற்கிறது.

(3) மேலான தெய்வத்தைத் தேடி அலைந்த தளர்வு, அது கிடைக்காததால் மனம் அடைந்த தளர்வு, பிறதெய்வங்களுக்கு உடலால் உண்மைத் தொண்டாற்றிக் களைத்த தளர்வு ஆகிய வற்றினை ' துவளல் ' என்ற சொல் குறித்து நின்றது. அதுவும் அபிராமி பட்டரின் தளர்வு அல்ல. அவ்வாறு அலையும் பிற அடியார்களின் தளர்வே ஆகும்.

(4) தனது வழிபடு தெய்வத்திடம் கொண்ட ஈடுபாடும், நம்பிக்கையும், உறுதிப்படுமே இனியொரு தெய்வம் உண் டாக என்று கூறவைத்ததேயொழிய வேறு தெய்வங்களைத் தாழ்வாக எண்ணும் நோக்கத்தால் அல்ல என உணர்தல் வேண்டும். இல்லத்தில் மங்கல நிகழ்ச்சிகள் நிறைவேறுதல் இப்பாடலின் பாராயணப் பலன் ஆகும்.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

**வித்துவான் திருமதி. ப. நீலா** எம். ஏ.,
தமிழ்ப்பேராசிரியை,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

( மலர் 43, இதழ் 1, பக்கம் 31 இன் தொடர்ச்சி. )

## 3 கேதாரநாதர் திருவருட்பா

வட்டவார் சடையுமத மத்தமும் இளம்பிறையும்
வருகருணை வனச முகமும்
மகிழ்மந்த காசமொடு மகரகுண் டலமுமிரு
வடிகா திலங்கு தோடும்
கட்டுமொரு புலியதளு மிட்டதிரு நீறுமொளி
கண்ட கண்டிகை மாலையுங்
கனலு முயர்புத்தகமும் ஞானமுத் திரையுமிவை
காட்டு செங்கர மலர்களும்
அட்டணைப் பாதமிளிர் அமுதசந் திரர்கோடி
யணைய திருமேனி யழகும்
ஆலநிழலுங் காண வந்திருந்து அடியனேன்
அந்தகா ரந்துடைத்தே
கிட்டுபர மானந்த சலதியினில் முழ்கிக்
கிடந்துவிளை யாட வருள்வாய்
கெங்காத ராகௌரி பங்காள காசிவரு
கேதார நாதகுருவே. 1

( பொ - ரை ) கங்கையைத் தரித்தவனே! உமையைப் பங்கில்கொண்டவனே! காசியில்எழுந்தருளியுள்ள கேதார நாத குருவே! வளைந்து நீண்ட சடையும், ஊமத்தமும் இளம்பிறையும், கருணைவளர் தாமரை முகமும், மகிழ்வுதரும் புன்சிரிப்பும், மகரகுண்டலமுடன் நீண்ட காதில் விளங்கும் தோடும், கட்டிய புலித்தோலும், மேனியிலிட்ட திருநீறும், ஒளியோடு கூடிய உருத்திராக்கமும், அனல், உயர்புத்தகம், ஞான அடையாள மிவை. காட்டும் செங்கர மலர்களும், அட்டணையிட்ட பாத

மும், ஒளிரும் அமுதம் நிறை சந்திரர் கோடியணைந்தாலனைய திருமேனியழகும் கொண்டு ஆலநிழலின்கீழ் எளியேன் காண வருவாய், வந்து எனது இருள் துடைத்துப் பரமானந்தக்கடலில் மூழ்கி விளையாட அருள்வாய்.

(க-து) ஆனந்தக் கடலில் அடியேன் மூழ்குமாறு வந்து காட்சி தருக.

(கு-ரை) வட்டவார்சடை - வட்டங்கொள் சடையுடைய சித்தர்' (திருவிளை - பதிகம் - 5) மதமத்தம் - கடுநாற்றத்தையுடைய ஊமத்தை. மத்தம் - தலைக்குறை. 'கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தம் கதிர்மதியம் உள்ளார்ந்த சடைமுடி' (திருஞான - 2-43-1) அறிவுதிரியக் காரணமானது என்ற பொருளும் - மதமத்தம் தருவதாய் உணர்க. வனசம் - தாமரை 'வனச குறமகளை வந்தித்தணைவோனே' (திருப்பு - 25) மந்தகாசம் - புன்சிரிப்பு. இருவடிகாது - பெருமை மிகு நீண்ட காது. உமையின் பகுதியானதால் தோட்டின் பெருமை கனம் சுட்டப்பட்டது.

உயர் புத்தகம் :-

"ஏதமில் பவித்திரம் வலக்கர னிமைக்கப்
போதம்வரை புத்தக மிடக்கையது பொற்ப"

-(திருவிளை. வேத. பொரு. 21.)

அட்டணைப்பாதம் :- கால்மேல் காலிட்டு அமரும் நிலை. தென்முகக் கடவுளின் இவ்வற்புத அழகு 13-ம் பதிகத்தில் பின்னும் அழகாகக் கூறப்படும்.

சித்தினுக் கறிவுஞ் செடங்களுக் கசைவுமுன்
திருவருள் கொடுக்கும் மென்னும்
சித்தாந்த ருக்குலகில் நன்றேது தீதேது
சிறியரார் பெரியவர்களார்
வைத்தபுகழ் கூறுவோ ரார்பிறர்க ளார்பழியை
வாய்மென்று திரிபவர்களார்
வணங்குவோ ரார்வணங் காதபே ரார்தம்மை
வைததெவர் வாழ்த்தின வரார்
கைத்திடும் பகைஞரார் உறவரார் பொல்லாத
கபடரார் நிட்கபடரார்
காயம் படைப்பாதி தொழிலுகளுக் கயனாதி
காரணர்க ளார்ப்பிரபஞ்ச

கிர்த்திய மெலா முநீ யென்றுசிறு நகைகொண்டு
கம்பீர ராயிருப்பார்
கெங்காதர கௌரி பங்காளர் ஆசிவரு
கேதார நாதகுருவே. 2

(பொ - ரை) கேதாரநாதகுருவே! அறிவுடைப் பொருள்களுக்கு அறிவையும் சடப்பொருள்களுக்கு அனுபவையும் தருபவன் நீயே என்னும் கொள்கையுடைச் சான்றோருக்கு உலகில் நன்று என்பதும் தீதென்பதும் இல்லை. சிறியார் - பெரியரென்ற பேதமில்லை. புகழ் - பழி கூறுவோர் எனப்பகரார். வணங்குவோரையும் வணங்காதோரையும் எண்ணார். வைத - வாழ்த்தின பேர்களைக்கண்டு கொள்ளார். கசப்புமிகுந்த பகை - உறவுக்காரர்களென்று கருதார். வஞ்சனையுற்றவர் - அற்றவர் என்ற பேதமில்லை. உடலைப் படைத்தல் முதலாகிய தொழிலுடைய பிரமன் முதலியோரைக் காரணமாகக்கருதி நோகார். எல்லா வகைச் செயலுக்கும் நீயே காரணமாவாய் என்று சிறுநகையோடு கம்பீரராயிருப்பார்.

(க - து) எல்லாம் உனதுசெயலென்றிருப்பின் துன்பமின்பமில்லை.

சித்தாந்தர் - கொள்கையுடையோர்.

' தீதும் நன்றும் பிறர்தர வாரா......
... ... ... ... ... ... ... ... ...
நீர் வழிப்படூஉம் புணைபோல் ஆர்உயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' (புறம் - 192)

வைத்தபுகழ் - நிலைத்தபுகழ். பழியை வாய்மெல்லல் - தூற்றுதல். கைத்திடும் பகை - நினைத்த போதெல்லாம் வெறுப்பைத் தருதலால் கைத்திடும் என்ற அடை - மிகப் பொருத்தமாகிறது.

ஆதவர்கள் கோடியற் புதமென்னவே யொளிர்
அகண்ட தேசோ ரூபமே
அமுதசந் திரரனந் தங்கோடி யெனஇனைப்
பாற்று மொரு கருணைவெளியே

பூதமுதல் நாதபரி யந்த சகமுதரம்
பொதிந்த பூரண வடிவமே
பூங்கமல நயன இந்திராதியோ ரறியாத
புத்தமுத நற்சலதியே
வேத வேதாந்தம் மறியாத பரசிவமென்னும்
விமலமே யென்றென்று நால்
வீதமதுர கவிமாரி நாவினுலே பொழிய
வெள்ள நீர் விழிகள் பொழியக்
கீதங்கள் பாடநட மாடுமுன் பாதங்கள்
கிட்டுவரம் இன்றருள்வாய்
கெங்காதர கௌரி பங்காள காசிவரு
கேதார நாதகுருவே. 3

(பொ - ரை) கேதாரநாத குருவே! ஒருகோடி சூரியர்கள் இணைந்த அற்புதமென்னவே ஒளிரும் பிரும்மாண்ட ஒளியே! எண்ணிலா அமுத மதியொளியென கனைப்பொழிக்கும் கருணை வெளியே. மண் என்ற பூதமுதல் நாதமீருன தத்துவங்களை உட்பொதிந்த வடிவே! தாமரை மலரை யொத்த கண்களை யுடைய இந்திராதிதேவர். அறியாத புதிய அமுதக் கடலே, வேதங்களால் அறிய முடியாத பரமசிவமென்னும் விமலமே!

இப்படி உனைப் புகழ்ந்து நால்விதக் கவிகளை நாவால் பொழியவும். வெள்ளமெனக் கண்ணீர் பெருகவும், கீதங்களைப் பாடவும், நடமாடுமுன்பாதங்களைநெருங்கிவரவும்வரமருள்வாய்.

(க - து) கவிமழை பொழிந்து கண்ணீர் பெருக்கி உன் பாதங்களை அடைய ஆர்வப்படுகிறேன்.

(கு - ரை) உதரம் - வயிறு. பூங்கமலநயன மிந்திரன் - உடலெல்லாம் கண்ணுடையனெனினும் முகக் கண்கள், மட்டுமே கமலம் போன்றவை என்பது எண்ணுக. புதிய+ அமுதம் - புத்தமுதம். நால்விதகவி - ஆசு, மதுர, சித்திர. வித்தார கவிகளென்பர். கீதம் - பாடல்

" கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி " - ஞானசம். 1. 43. 5.

(தொடரும்)

# உலகக் குடும்பம்

## டாக்டர். திரு. மு. அறம்

துணைவேந்தர், கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம்.

20 ஆண்டுகளுக்குமுன்னால், அதாவது 1963 ஆம் ஆண்டில் நான் சீன – இந்திய சமாதான யாத்திரையில் கலந்து கொண்டேன். பல நாடுகளைச் சேர்ந்த அமைதி அன்பர்கள், உலக சாந்தி சேனையின் சார்பாக, டில்லியிலிருந்து பாதயாத்திரை செய்தார்கள். உத்திரப் பிரதேசம் பீகார், வங்காளம், அசாம் மாநிலங்களில் பிரயாணம் செய்துவிட்டு இறுதியில் அசாமிலுள்ள மைத்திரி ஆசிரமம் என்ற நிலையத்தில் தங்கியிருந்தோம். விநோபா நிறுவிய இந்த ஆசிரமம் இமயமலை அடிவாரத்தில் மிக அழகான சூழ்நிலையில் அமைந்துள்ளது.

சீனு செல்வதற்காக சீன அரசாங்கத்திற்கு விண்ணப்பம் செய்திருந்தோம். சீன அரசின் பதிலுக்காகக் காத்திருக்கின்ற போது; யாத்திரைக் குழுவின் தலைவர் திரு சங்கரராவ் தேவ் அவர்கள் பிரதமர் பண்டித நேருவைச் சந்தித்துப் பேசுவதற்காக டில்லி சென்றார். விநோபா அடிகளைச் சந்தித்துப் பேசுவதற்காக நான் யாத்திரைக் குழுவின் சார்பாக ஒரிசா சென்றேன்.

விநோபா அப்பொழுது ஒரிசாவில் சம்பல்பூர் பகுதியில் பாதயாத்திரை செய்து கொண்டிருந்தார். நான் அவர்களுடன் மூன்று நாட்கள் தங்கியிருந்தேன். விநோபா முகாமில் எங்கள் சமாதான யாத்திரை பற்றிப் பேசினோம். யாத்திரை அனுபவங்கள், யாத்திரை உறுப்பினர்களுடைய எண்ணங்கள், சீனு செல்வதற்கான முயற்சி, மற்றும்எதிர்காலத்திட்டம் இவைகளைப் பற்றியெல்லாம் நான் விநோபா அடிகளிடம் எடுத்துச் சொன்னேன்.

விநோபா என்னிடம் சொன்னார்: " நீங்கள் உலகஅமைதிக்காக யாத்திரை செய்கிறீர்கள். நானும் அதே நோக்கத்துடன் தான் யாத்திரை செய்கிறேன். என்னுடைய லட்சியமும் உலக அமைதியே ".

மேலும் விநோபா சொன்னது: " நான் செல்லும் ஒவ்வொரு கிராமத்திலும், மக்கள் " உலகம் வாழ்க – ஜெய் ஜகத் " என்று முழக்கமிடுகிறார்கள் ".

---

குறிப்பு :- திருச்சி வானொலியில் ஒலிபரப்பினது. அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

பின்னர் விநோபா அடிகள் ஒரு நல்ல நிகழ்ச்சி ஒன்றை விவரமாக என்னிடம் சொன்னார்:

" சிறிது காலத்திற்கு முன்பாக பண்டித நேரு என்னைச் சந்திக்க வந்தார். அப்பொழுது நான் வங்காளத்தில் யாத்திரை செய்துகொண்டிருந்தேன். தாகூர் நிறுவிய சாந்திநிகேதன் சென்றுவிட்டு நேரு என்னைப்பார்க்க வந்தார். பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு ஆகியிருந்தது. சுமார் நாற்பதாயிரம் மக்கள் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லோரும் " உலகம் வாழ்க ஜெய் ஜகத் " என்று முழக்கமிட்டார்கள்.

மேடையிருந்து நேரு கூறினார்: " நீங்கள் " ஜெய் ஜகத் " என்று சொல்கிறீர்கள். அதுநல்லதே அதுஎனக்கும் உடன்பாடே. ஆனால் நீங்கள் " ஜெய் ஹிந்த் " என்று சொல்வதை மறந்துவிடக்கூடாது " என்று நேரு சொன்னார். அவர் சொல்வதைக் கேட்டுநாற்பதாயிரம் மக்கள் " ஜெய் ஹிந்த் " என்று சொன்னார்கள்.

நேரு பேசி முடித்தார். அப்பொழுது நாற்பதாயிரம் மக்களும் தாமாகவே, தங்களை அறியாமல், " ஜெய் ஜகத் – உலகம் வாழ்க " என்று முழக்கமிட்டார்கள்.

இதை எனக்கு எடுத்துக் கூறிய விநோபா இந்திய மக்கள் எவ்வாறு உலக மனப்பான்மை உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதை விளக்கிச் சொன்னார்.

மேலும், விநோபா சொன்னது :

" எனது யாத்திரையில் கிடைக்கும் ஒவ்வொரு நிலதானப் பத்திரமும் உலக அமைதிக்கான ஒரு வோட்டு ஆகும். "

" ஒவ்வொரு கிராமதானமும் உலக அமைதிக்கான ஒரு அணுகுண்டு ஆகும். "

" உலக மனிதன், விஷ்வ மனு " என்ற தொடர், பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எழுதிய ருக்வேதத்தில் வந்துள்ளது. "

" உலகக் குடும்பம் " (வாசுதேவ குடும்பகம்) என்ற தொடரும் நம் பழம் இலக்கியத்தில் வந்துள்ளது. "

தமிழகத்தைப் பொறுத்தவரையில், உலக மனப்பான்மை நெடுங்காலமாக நிலவி வந்துள்ளது. " யாதும் ஊரே யாவரும் கேளிர் " என்பது பழந்தமிழ்ப் புலவர் கூறியது.

இன்றைய உலக நிலையை வினோபா நன்கு உணர்ந்திருந்தார், அறிவியல் காரணமாக உலகம் ஒருமைப்பட்டுச்சிறிய இடமாக மாறிவிட்டதை அவர் நன்கு தெரிந்திருந்தார். அவர் சொல்வது; " இன்றைய உலகத்தில் தனித்திருத்தல் என்பது இயலாத ஒன்று. பிரிந்திருத்தல் என்பதும் முடியாத ஒன்று. சக வாழ்வுதான் இன்றைய தேவை. அதன் மூலமே மனித இனம் வாழ முடியும். இல்லாவிடில் மனித இனம் அழிந்து போய்விடும். வினோபா அடிகள் உலகம் ஒரு நாடுபோல் ஆகவேண்டும் என்று விரும்பினார்.

அவர் சொன்னார்: " எவ்வாறு நாம் இன்று இந்தியாவுக்குள் ஒரு மாநிலத்திலிருந்து இன்னொரு மாநிலத்திற்குத் தடையின்றிச் செல்கிறோமோ, அதுபோல ஒருவன் உலகத்திலுள்ள ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குத் தடையின்றிச் செல்ல உரிமை இருக்க வேண்டும். "

வினோபா மேலும் சொல்வது : இன்று கிராமப் பஞ்சாயத்து இருப்பதுபோல உலகப் பஞ்சாயத்து அமைய வேண்டும். "

உலக சமுதாயம் எதிர்காலத்தில் எப்படி இருக்கும் என்பதை வினோபா விவரிக்கிறார்; " ஒரு பக்கம் உலகப் பஞ்சாயத்தும் உலக சபையும் இருக்கும். இன்னொரு பக்கம் கிராமப் பஞ்சாயத்தும் கிராம சபையும் இருக்கும். இவை எதிர்கால உலகின் இரு துருவங்கள் "

வினோபா தொலைநோக்குடைய தீர்க்கதரிசி. " உலகம் வாழ்க - ஜெய் ஜகத் " என்ற புதிய மந்திரத்தை அவர் இந்தியாவிற்கும் உலகத்திற்கும் அறிவித்துள்ளார். அவருடைய அழகான வாசகம் ஒன்றைச் சொல்லி இந்த உரையை முடிக்கிறேன்.

" நாம் உலக மனிதர்கள். எந்த ஒரு நாட்டைப் பற்றியும் அதிகம் பெருமைப்பட மாட்டோம். எந்த ஒரு சமயத்தையும் வற்புறுத்த மாட்டோம். எந்த ஒரு சாதி அல்லது வகுப்புடனும் நம்மைப் பிணைக்க மாட்டோம். உலகத்தின் சிறந்த சிந்தனைகள் நிறைந்த பூஞ்சோலையில் உலவி வருவது, அவற்றைக் கற்றுக் கொள்வது நமது முயற்சியாக இருக்கும். இந்தச் சிந்தனைகளைத் தெரிந்து, தெளிவடைவது நமது கடமையாக இருக்கும். அச் சிந்தனைகளிடையே உள்ள முரண்பாடுகளை விலக்குவது நமது கொள்கையாக இருக்கும் "

---

திருச்சியில்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்

# தனுர்மாத வழிபாடு

### புலவர் திரு. மு. வைத்தியநாதன், திருச்சி.

தருமபுர ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தனுர் மாத வழிபாட்டின் பொருட்டுத் தமது ஆதீனத் திருக்கோயில் களில் ஒன்றாகிய, திருச்சியை அடுத்த உய்யக்கொண்டான் திருமலை, ஸ்ரீ உஜ்ஜீவநாதப்பெருமான் திருக்கோயிலுக்கு, 1984 ஆண்டு ஜனவரிமாதம் முதல்நாள் அன்று காலை 11–30 மணி யளவில் எழுந்தருளிப் பெருமானை வழிபட்டு, அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கியருளினார்கள்.

பின்னர் நண்பகல் ஒரு மணியளவில் திருச்சியில் உள்ள தமது ஆதீன அருள்நிலையங்களில் ஒன்றாகிய ஸ்ரீ மௌனமடத் திற்கு எழுந்தருளிக் கொலுக்காட்சி அளித்து, வழிபட்ட அடியார்கட்குத் திருநீற்றுப் பிரசாதம் வழங்கினார்கள்.

மாலை 5–30 மணியளவில் ஸ்ரீ தாயுமானவர் திருக்கோயில் வழிபாட்டிற்கு எழுந்தருளியபோது ஸ்ரீ மௌனமடம்முகப்பில் உள்ள ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமியை வழிபட்டார்கள்.

அப்பொழுது ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி திருக்கோயிலில், ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருமுன்னிலையில், திருச்சி புறநகர் ஆகிய விமான நிலையப்பகுதி 7 – காமராஜ் காலனி, T. M. அடைக்கலசாமி என்ற கிறித்தவ சமயத்தைச் சார்ந்த பாடகர், தன் குடும்பத்தாருடன், இந்து சமயத்தில் சேர்ந்து இந்துப் பெயர் தாங்கி, இந்துவாக வாழ விருப்பம் தெரிவித்து வணங்கினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், அவர்களை நீராடி வரச்செய்து புனிதநீர்தெளித்து ஏற்றுத் திருநீறுவழங்கி ஆசீர் வதித்து இந்துப்பெயர் சூட்டினார்கள்.

அவர்கள் பெயர் பற்றிய விபரங்களாவன :-

| கிறித்தவப் பெயர் | | இந்துப் பெயர் |
|---|---|---|
| 1. T. M. அடைக்கலசாமி | ... | T. M. மாரியப்பசாமி. |
| 2. இருதயமேரி | ... | மாரியம்மாள். |
| 3 சகாயராஜ் ( S. S. L. C ) | ... | கணபதி. |
| 4. குழந்தைரவி ( B. Sc., ) | ... | கோபிநாதன். |
| 5. பிரான்ஸிஸ் ( VIII - Std ) | ... | இராஜேஸ்வரன். |
| 6. சந்தானம் ( VI - Std ) | ... | சரவணன். |

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், மலைமேல் உள்ள ஸ்ரீ உச்சிவிநாயகர் பெருமானையும், ஸ்ரீ தாயுமானவர் பெருமானையும், ஸ்ரீ மட்டுவார் குழலம்மையையும் திருமுறை வேதபாராயணங்களுடன் வழிபட்டு, இரவு எட்டு மணியளவில், நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற திருநெறிய தமிழ் இசை மன்றத்தின் பதினோராவது ஆண்டு விழாவில் கலந்து கொண்டு, திருமுறை வாணர்களுக்குச் சிறப்பு செய்து, அருளாசியுரை நிகழ்த்தினர்கள்.

இரவு 11 மணியளவில் மலைக்கோட்டை, சறுக்குப்பாதைத் தெருவில் உள்ள ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயிலில் வழிபாடு நிகழ்த்தித் தருமைக்கு எழுந்தருளினர்கள்.

---

## பார்வையாளர் குறிப்பு

### தருமையாதீனம்

### ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம்.

தஞ்சை சிவஸ்தல அன்பர்கள், தாய்மார்களுடன், இன்று இத்தலத்தைத் தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்தது. மிகப் பணிவன்போடு பக்தர்களை கவரும்வகையில், சிப்பந்திகள், மானேஜர், கண்காணிப்பாளர் முதலிய எல்லோரும் எல்லா மூர்த்திகளையும் நன்கு தரிசனம் செய்துவைத்தது எல்லோருடைய மனதையும் பெருமகிழ்ச்சிக்குள்ளாக்குகின்றது. இந்த முறையில் என்றும் எல்லோர்க்கும் நல்ல பக்தியை வளர்க்க தேவஸ்தானம் உதவி செய்து சிறந்து வளர்வதாகுக.

சுவாமி குஹானந்தர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை திருச்சி.

3—2—1984

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் சமுதாயப் பணிகள்

**வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன்** எம். ஏ.,
தமிழாசிரியர், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்பள்ளி, தருமபுரம்.

**கயிலைக் குருமணிகட்கு :**

பத்திப் பெருமையை எத்திக் கும்தரு
முத்தித் தலமதில் உறைகின்ற
சத்தித் துணைகொளும் பித்தன் அருள்பெறு
அத்தன் கயிலைசற் குருதேவா !
தித்திக் கிறதொரு புத்தித் தலமதில்
வைத்துக் கவிதர அருள்நீ; வா
தத்தித் தளர்நடை இட்டுச் சிறியஎன்
முத்துக் கவிதையின் பொருளாவாய் !

**தருமை 26 ஆம் குருமணிகளின் திருவடிகளுக்கு :**

நுதல்விழியை எங்கொளித்தீர் ? சடைக்கு மேலே
நுரைத்திருந்த கங்கையதும் எங்கே காணோம் ?
இதமளிக்கும் மான்மழுவும் எங்கே ? நாகம்
இருக்குமிடம் இயம்பிடுக; ஞானத் தேவே !
பதமளிக்கும் சிவமே !எம் பந்தம் தீர்க்கும்
பரம்பொருளே ! பிறவிக்கு மருந்தே ! அன்பை
நிதமளிக்கும் அருட்குருவே ! சைவப் பேறே !
நின்கமல மலர்ப்பாதம் நினைந்து வாழ்வாம்.

**அவையோர்க்கு :**

கவிதாஞ் சலிசெய்வீர் ! கண்ணப்பன் வணங்குகிறேன் !
அறிஞர்களே ! பெரியோரே ! அவையத்தில் கூடியுள்ள
நண்பர்களே ! எல்லோர்க்கும் நவில்கின்றேன் வணக்கங்கள்.
கயிலைக் குருமணியின் கவினுர்ந்த தொண்டுகளைப்
பேசுகின்ற என்மொழியில் பிழைபொறுக்க வேண்டுகிறேன் !

## சமுதாயம் – ஒரு சிந்தனை!

சமுதாயம்! சமுதாயம்! பொல்லாத சமுதாயம்!
பொல்லாத சமுதாயம் பொறுப்பற்ற சமுதாயம்!
ஏதோ இருக்கிறது...! எங்கேயோ போகிறது...!

தெய்வத்தை நம்பாமல் தேவனையும் எண்ணாமல்
பொய்வைத்து மூடும் பொல்லாத சமுதாயம்!

அமைதியே இல்லாமல் அற்பமனம் கொண்டலையும்
தமையறியா மக்களினம் தழைக்கின்ற சமுதாயம்!
ஆயுதக் கலப்பைகளால் அமைதிப் பயிர்விளைக்கும்
ஊதாரிக் கும்பல் உலவுகின்ற சமுதாயம்!
கல்விக்கும் வழிகாணார்; கஞ்சிக்கும் வழிகாணார்
செல்வம் திரட்டுதற்கும் சீரான வழிகாணார்!
சோம்பேறித் தனத்தாலே சுற்றித் திரிகின்றார்
தாம்போகும் போக்குத் தமக்கே தெரியாதார்!
ஊர்சுற்றித் திரிகின்ற உதவாக்கரை; முரட்டுப்
பேர்பெற்றுத் திரிகின்ற பேதையர்கள் குவிந்துள்ளார்
நியாயம் தருமவழி நிகண்டினிலே வைத்துவிட்டார்
சாயம் வெளுக்கின்ற சண்டாளர் சமுதாயம்!

கட்டிய மனைவிக்கோ கந்தலுடை! போலிநகை!
பட்டும் பவழமதும் பல்லிளிக்கும் பாவைக்கு!
முன்னாலே மரியாதை! முதுகின்பின் கேலிநகை!
சொன்னாலே வெட்கமிது! தரங்கெட்ட சமுதாயம்!
பிஞ்சுகளும்பழுத்துப் பேயாட்டம் ஆடுவது
நஞ்செனவே பரவிவிட்ட நாராசச் சமுதாயம்!
நம்பவைத்துக் கழுத்தறுக்கும், நட்டாற்றி லேதள்ளும்
வம்பர்களின் கைவலுத்த வக்கற்ற சமுதாயம்!
(சமுதாயம்! சமுதாயம்! பொல்லாத சமுதாயம் ......!)

கைபிடித்து ஒருபிள்ளை களைத்து நடந்துவரும்!
இடுப்பினிலே ஒருபிள்ளை இளைத்துச் சிறுத்திருக்கும்!
வயிற்றில் ஒருபிள்ளை வற்றி வளர்ந்துவரும்!
முன்னாலும் பின்னாலும் மூக்கொழுகும் சந்ததிகள்!
இன்னுமொரு பிள்ளைக்கு இளித்தபடி அச்சாரம்!
சமுதாயம்! சமுதாயம்! பொல்லாத சமுதாயம்!

தண்ணீர் படும்பாடோ, தண்ணீர் படும்பாடு!
கண்ணீரில் சாகின்ற கணக்கற்ற குடும்பங்கள்!

போதை தலைக்கேறிப் போகின்ற வழியெல்லாம்
கவிதை மணம்நாறிக் கமழ்கின்ற சமுதாயம்!
இவ்வாறு முதுகொடிந்து நிற்கும் சமுதாயச்
சிந்தனையால் வாடிச் சிறகிழந்து நின்றேன்நான்.

## குருமணியைக் கண்டேன்!

நள்ளிரவு! மழைக்காலம்! தவளைஒலி! பறவையினம்
மெள்ள உறங்கியது! - மெதுவாக - அசைந்துவரும்
கொள்ளை அழகுமிக்க கயிலைக் குருமணியைக்
கண்டேன்; ஆம்! உதித்துவந்த கற்பனையில் நான்கண்டேன்
பேச்சிழந்து நின்றேன்! பேதை அறிவழிந்தேன்!
மூச்சிழக்கும் முன்னே முறுவலித்து நின்றார்கள்!
"கண்ணப்பா! என்னப்பா! கற்பனையில் இருக்கின்றாய்!
சொல்லப்பா! அஞ்சாதே! சோகம் உனக்கெதற்கு?"
நான் சொன்னேன்......!
"சுவாமி! சமுதாயம், சாக்கடைபோல் ஆகிறதே!
சீர்திருத்த வேண்டாவா! செப்புங்கள்" என்கின்றேன்!
குருமணிகள் அருள்கின்றார்......
எண்ணிப்பார், உன்னிப்பாய்! எத்தனை நாம் செய்துள்ளோம்
ஏதேதோ மயக்கத்தால் இங்குவந்து உளறுகிறாய்!

## துதித்து மொழிகின்றேன்:

தேவே! திருக்கயிலைத் திகழ்சிவமே! அருளொளியே!
பாவியேன் பிழைபொறுப்பீர்; பகர்கின்றேன்; தொண்டுகளை!
பொன்னிறத்துப் பெருகொளியே! பொக்கிஷமே! சைவஒளி
மின்னுகின்ற மதிக்கொழுந்தே! சமுதாயம் செழிப்பதற்குக்
கல்வி - பக்திமணம் கலந்திருக்க வேண்டுமென்று
கல்லூரி - பள்ளிகளைக் கருத்திசைய அமைத்தீர்கள்!
தமிழ்மொழியும் வடமொழியும் தழைப்பதற்குக் கல்லூரி
அமைத்து மனங்களித்த அற்புதத்தை என்னென்பேன்!
ஈடில்லாக் கொடையாலே இன்னருளின் திறத்தாலே
தருமை ஞானத்தாய் தன்பெயரில் அமைவித்த
பெருமை வளஞ்சேர்க்கும் - மகளிர்க்குக் கல்லூரி
மயிலாடு துறைவிளங்கும் மாட்சிமையை மறப்போமா!
படிப்பறிவும் பட்டறிவும் பாரில் மனிதகுலம்
துடிப்பாக வளர்தற்குத் துணையாகும் ஜீவன்கள்!
ஜீவஒளி சேர்த்தீர்! சிவஒலியும் சேர்த்தீர்கள்!
குருமணிகள் தலையசைக்க - கும்பிட்டு நின்றேன்நான்!

குருஞான சம்பந்தர் குலவு திருப்பேரால்
பெருகும் படிப்பறிவுப் பெட்டகமாம் கூடங்கள்!

மாணவர்கள் தங்குதற்கு மாண்பார்ந்த விடுதிகளும்
கல்விப் பரிசுகளும் கனிவுதரும் தருமங்கள் !
நூல்நிலையம், மாநாடு, வெளியீடு, சொற்பொழிவு
கால்நூற்றுண்டில் செய்த கருதரிய தருமங்கள்
ஏட்டில் அடங்கா ; எழுத்தும் பயம்கொள்ளும் !
பெண்கல்வி – தொழிற்கல்வி பெருகச் சிறப்பதற்குக்
கண்கண்ட தேவே ! காட்டிவிட்ட வழித்துறைகள்
லட்சங்கள் ஆயிரங்கள் – அதற்குக்கீழ் தொகைதருதல்
இல்லை இல்லைநும் அத்யாய ஏடுகளில் !
திருக்குறளும் திருமுறையும் – சமுதாயச் சீர்மைகளைப்
பெருக்கும் என்றெண்ணி வெளியிட்டுத் தந்தீர்கள் !
சரித்திர ஏடுகளும் விஞ்ஞான வெளியீடும்
சிறக்க உதவியமை சிந்தனையில் தித்திக்கும் !
சமயப் பிரசாரத்தால் சமுதாயம் திருந்துமென –
சென்னை நகரத்தில் சீர்மிக்க சைவத்தை
பரப்பி மகிழ்வித்த பணியினை நாம் மறப்போமா !
அன்றே சத்துணவு ஆரம்பம் திருமடத்தில் !
உண்ண உணவில்லாச் சிறுவர்க்கும் ஏழைகட்கும்
அன்னம் பாலித்த அருமைகளோ ஏராளம் !
குருமணிகள் தலையசைக்க – கும்பிட்டு நின்றேன் நான்.

அரை ஆடையாக அரையாடை தரித்தமையால்
புரையோடிப் போனவர்க்குப் புத்தாடை நிதியங்கள் !
போலிப் புகழ்வேண்டாப் புனிதமனப் பெட்டகமே !
‘ தாலிக்குத் தங்கம் ’ அன்றைக்கே தந்தீர்கள் !
பட்டாடை, திரவியங்கள் பல அளித்துத் திருமணங்கள்
எத்தனையோ நடந்திடநீர் இனிய வழிகாட்டியதை
நெஞ்சம் மறந்திடுமோ ? நின்மலனே ! வணங்குகிறேன்
இனிய தமிழ்ப் புலவர்க்கு ஈடி லாப் பட்டங்கள்
அமைய அளித்தீர்கள் ! அத்தனையும் மறப்போமா ?
கிறித்தவரின் போற்றுதல்கள் ! இசுலாமியர் மாலை !
வேதாந்தம் பேசிடுவோர் வித்தாரப் புகழாரம்
அத்தனையும் கொண்ட அருமைக் குருமணியே !
பக்தியிலாச் சமுதாயம் பாழாகும் என்பதனால்
எத்தனையோ திருக்கோயில் குடமுழுக்குச் செய்தீர்கள் !
உண்பதற்கு நல்லுணவும் உடுப்பதற்கு ஆடைகளும்
இருக்க ஒருவீடும் மருத்துவமும் வசதிகளும்
தேவை என உணர்ந்த தெய்வதமே ! வணங்குகிறேன்
குருமணியே ! நுங்கள் குறைவற்ற பணிகள்தமை
விரிவாகச் சொல்லும் வித்தை தெரியவில்லை !

ஏதோ தொகுத்துச் சொல்லிவிட்டேன் என்றேன் நான்
குருமணிகள் எனைக்கண்டு முறுவலித்து அருளியது
" எத்தனைதான் தொண்டு செய்தாலும் இவ்வுலகில்
அத்தனையும் மணக்க அருள்வேண்டும்! அருள்வேண்டும்!
கடமைகளைச் செய்திடுங்கள்! காலம் சிறந்துவரும்!
தருமம் வளர்த்திடுங்கள்! தரமும் உயர்ந்துவிடும்!
இறையருளால் எல்லாம் இனிதாக இருக்கட்டும்!
என்றூர்கள் பின்னர் சொல்லிக் கொடுத்தார்கள்
" சமுதாயம்... சமுதாயம்...... தரமான சமுதாயம்!
தரமான சமுதாயம்... தனியான சமுதாயம்!
ஆமாம்! நானும் சொன்னேன்
சமுதாயம்... சமுதாயம்... தரமான சமுதாயம்!
தரமான சமுதாயம்... தனியான சமுதாயம்!
அன்பில் நிறைகிறது! அருளில் வளர்கிறது!



## சிவப்பிரகாசம்

முதல்நூலான சிவஞானபோதம் வழிநூலான சிவஞான சித்தியார் என்ற இரண்டு நூல்களின் பொருள் இனிது விளங்குதற்கு இதனைச் சார்பு நூலாய் எழுதினர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் நூறு விருத்தங்களைக்கொண்டுள்ளது. இது " தன்னை ஒதியுணர்ந்த பக்குவர் அறிவில் சிவம் பிரகாசித்தலின் சிவப்பிரகாசம் " என்னும் பெயர்த்தாய் நிலவும் சித்தாந்த நூல். இந்த நூலுக்கு இரண்டு உரைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று மதுரைச் சிவப்பிரகாசர் இயற்றியஉரை. மற்றொன்று திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த நல்ல சிவதேவரின் சிந்தனை உரை. சிவப்பிரகாசத்தை இயற்றிய உமாபதி சிவாசாரியார் தில்லைவாழ் அந்தணருள் ஒருவராவர். இவர் வடமொழி, தமிழ் என்ற இரண்டு மொழிகளையும் நன்கு பயின்றவர். பழமை என்ற காரணத்தால் ஒரு நூல் நல்லதென்றும், புதுமை என்ற காரணத்தைக்கொண்டு ஒன்று தீது என்றும் கூறுதல் தவறு என்பதனை,

" தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா "

என்று ஆசிரியர் இந்நூலின் பாயிரத்தில் விளக்கியுள்ளார்.




**ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(ருத்ரோத்காரி௵ மாசி௴ 1௳ முதல் 30௳ முடிய)

(13—2—1984 முதல் 13—3—1984 முடிய)

| | | | |
|---|---|---|---|
| ல | | ரா | சந் |
| சூ | இராசி | | |
| பு | | | |
| கு சு | கே | சனி செ | |

| | | | |
|---|---|---|---|
| செ சனி | கே | | சூ |
| | அம்ஸம் | | ல/ பு கு |
| | | | |
| சு சந் | | ரா | |

ஸ்ரீ ருத்ரோத்காரி௵ மாசி௴ 1௳ திருவாதிரை நக்ஷத்திரம் பத்திரை கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 5 நாழிகை 49 விநாடிக்கு மீன லக்கினத்தில் ஸ்ரீ உலகரட்சகரான சூரியபகவான் உலக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு மகர ராசியிலிருந்து கும்ப ராசி சங்கிரமணமாக மாசிமாதப் பிரவேசம் செய்தருள்கின்றார். அன்று விஷ்ணுபதி புண்ய காலமாகும். சங்கிரண கால கிரகஸ்திதியின் பலனாவது உலகில் எங்கும் வளமிகுந்த பிரதேசங்களிலிருந்து [உணவு தானியங்கள், வியாபாரப் பயிர்களில் விருத்தி ஏற்பட்டு பிரஜைகளின் தேவைக்கு வந்து சேரும். இயந்திரத்தொழிற்சாலைகளில் நாகரீக வாழ்க்கைக்குரிய பொருட்கள் உற்பத்தி அதிகரித்து வரும் உலக நாடுகளில்கூட்டு இயக்கமாகத்தொழிற்சாலைகள் ஏற்பட்டு பிரஜைகளுக்கெல்லாம் ஜீவனோபாயம் ஏற்படும். தேசங்களில் ஆன்றோர்களால் சிவ புண்ணிய கைங்கர்யங்கள் தர்மங்கள்

நடந்து கொண்டிருக்கும். ஈஸ்வரானுக்கிரகத்தினால் நல்லோர் பலர் சமூகசேவைக் தூக்கர்த்தாவாகிவந்து நெறியுடன் செயலாற்றுவர். தேசங்களில் ஆளுநர்கள் நீதியாக ஆட்சிபுரிந்து பிரஜைகளை இரட்சிப்பார்கள்.

உலகில் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் ஈஸ்வர கட்டளையில் அவதாரமாகி வந்து ஈசுவரனையே பூசிக்கின்ற பாக்யத்தில் திருவீற்றிருக்கின்ற சிவஞானகுருமகான்கள் குருமகாசந்நிதானங்கள் உலகத்துக்கு சிவபரம் பொருள் பற்றி தம் திருவாய் மலர்ந்து இயம்பியும், உலகில் எங்கும் சிவசமயம் பரவ கிளைமடங்கள் நிறுவி சிஷ்ய கோடிகளை அதற்குக் கர்த்தாவாக நியமித்தும் அவை தழைத்தோங்க அனுக்கிரகம்செய்தருளுவார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறு காலபூசைகள், விசேஷ சிவன்ராத்திரி பூசைகள் நடைபெறும். உலகில் க்ஷேமம நிலவும். எல்லா பிரஜைகளும் சிவதரிசனம் செய்து சிவனருள் பெற்று உயர் வாழ்க்கை நடத்துவர்.

1. மேஷம் :- அசுவதி - பரணி. கார்த்திகை - ¼

(சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ.)

மேஷ ராசி 9 பாதங்களும் சுபமானபலனைத் தரும். கும்படு அபிவிருத்தியில் பணவருமானங்கள் கணிசமாக வந்துசேரும். வித்வத்துவம் கலைத்துறைகளில் பிப்ரவரி 19 உ முதல் விசேஷ நன்மைகளும் உத்யோகத்தில் உயர்பதவியும் தரும். மனை வாகனப் பிராப்த்தி மார்ச்சு 11 உக்கு நல்லவை ஏற்படும். மனைவியின் இரத்தபித்தநலிவுகள் குணமாகும். பிப்ரவரி 13, 14, 19, 20, 21, 22, 28, 29 மார்ச்சு 1, 2, 3, 6, 7, 8, 11, 12 தேதிகளில் தனுதாயம், ஜெயம், ஊக்கம், அரசகௌரவம் ஏற்படும், பிப்ரவரி 23, 24, 25, தேதிகள் சந்திராஷ்டம். மற்ற தேதிகளில் மந்திம பலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி - மிருகசீர்ஷம் ½

( இ ஊ. ஏ. - ஒ. வ. வி. வு. - வே. வோ. )

ரிஷப ராசி 9 பாதங்களும் சுபமான பலனைக்தரும். குடும்ப அபிவிருத்தியில் கணிசமாகப் பணவருமானங்கள் வந்துசேரும். பிப்ரவரி 17 உக்கு மேல் எழுத்துமூல விஷயங்களில் அரசாங்க லிகிதங்களில் நல்லன ஏற்பட்டு வரும். எல்லாக்காரியங்களும் புத்திசாதுரியத்தால் நடந்துகொண்டிருக்கும். இயந்திரசாதனங்களில் அபிவிருத்தி பலன் ஏற்படும். தாரபுத்திரர்களின்

சௌக்கியம் நன்றாக இருந்துவரும். பிப்ரவரி 15, 16, 21, 22, 23, 24, 25, மார்ச்சு 1, 2, 3, 4. 5, 9, 10, 13 தேதிகளில் தனுதாயம். நல்ல சேதிவருதல், ஸ்திரசம்பத்து ஏற்படுதல், ஜெயம் முதலிய நற்பலன்கள் ஏற்படும். பிப்ரவரி 26, 27, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் ஏற்படும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾
( கா. கி. - கு. க. ஙஃ. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுன ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் வந்து கொண்டிருக்கும். அடிக் கடி அவசியச்செலவினங்களும் ஏற்படும். சகோதரருக்கு உயர்வு ஏற்படும். வீடு வாகனங்களில் நல்லன ஏற்பாடு நடக்கும், வயிற்றில் அழற்சி போன்ற நலிவு ஏற்பட்டு உடன் வைத்தியத் தால் குணமாகும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும் பிப்ரவரி 13, 14, 15, 17, 18, 23, 24, 25, 26, 27, மார்ச்சு 4, 5, 6, 7, 8, 11, 12, தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 28, 29. தேதிகளின் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்

4. கடகம் :- புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.
( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடக ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாகவே நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானம் வரும். வித்வத்துவம் கலைத்துறைகளில் நற்பலன் தரும். பிப்ரவரி 28வுக்கு அரசாங்கத் தொடர்புள்ள விஷயங்களில் அனுகூலம் ஏற்பட்டுவரும். மார்ச்சு 10வுக்கு மேல் கட்டடம்வாகனங்களில் நல்லன ஏற்படும். தார சௌக்கியம் புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். பிப்ரவரி 15, 16, 19, 20, 26, 27, 28, 29 மார்ச்சு 6, 7, 8, 9. 10, 13 தேதிகளில் தனுதாயாதி, காரியானுகூலம், அரசகண்யம் ஆகிய நற்பலன் தரும். மார்ச்சு 1, 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼
( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே.)

சிம்ம ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தன வருமானம் நல்ல விதத்தில் வந்துசேரும். வித்வத்துவம் கலைத்துறைகளில் நல்லோர் பிரபலஸ்தர்களால் போற்றப்படுதல் ஆகும். கட்டடம் வாகனங்களில் பழயன

சீர்திருத்தம் ஆகும். எல்லா காரியங்களையும் திடசித்தமாக நடத்திக் கொண்டிருக்கும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 13, 14, 17, 18, 21, 22, 28, 29மார்ச்சு 1, 2, 3, 9, 10, 11, 12 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும் மார்ச்சு 4, 5 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½

(டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ.)

கன்னியாராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் கணிசமாக பண வருமானம் வந்துசேரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் உத்தியோகததில் பிப்ரவரி 19உ முதல் நல்ல வாய்ப்புகள் பதவி உயர்வுகள் ஏற்படும். முன்பு வரவேண்டிய பொருள்கள் கைக்கு வந்துசேரும். பூமி பிராப்தியில் மாதக்கடைசியில் நல்லன ஏற்பட்டுவரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 13, 14, 15, 16, 19 20, 23, 24, 25 மார்ச்சு 2, 3, 4, 5, 11, 12, 13 தேதிகளில் தனதாயம், அரசாங்க நற்செய்தி வருதல், ஜெயம் ஆகிய நற்பலன்கள் ஆகும். மார்ச்சு 6, 7, 8 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

7. துலாம்:- சித்திரை ½ - சுவாதி - விசாகம் ¾

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வரும். அக்கம்பக்கத்தவர் கோள் வார்த்தைகளால் பாதிப்புகள் வரினும். உடன் சரி செய்தல் ஆகும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்துவரும். புத்திரனுக்கு நல்ல சௌகரியங்களை உண்டு பண்ணும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். பிப்ரவரி 15, 16, 17, 18, 21, 22, 26, 27 மார்ச்சு 9, 10 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வரவாகிக் கொண்டிருக்கும். பொன்மணி பூஷணம் தரும். வீடுவாகனங்களில் நவீன அமைப்பும் நல்ல அனுபோகமும் ஏற்படும். தாரபுத்திரர்களின் சுகம்

நன்றாக இருந்துவரும். பிப்ரவரி 17, 18, 19, 20, 23, 24, 28, 29 மார்ச்சு 1, 6, 7, 8, 9, 10 தேதிகளில் தனதாயம், காரிய ஜெயம், மகிழ்ச்சிதரும்சம்பவங்கள் ஏற்படும். பிப்ரவரி 13, 14 மார்ச்சு 11, 12 தேதிகள்சந்திராஷ்டமம். மற்றதேதிகளில்மத்திமபலன்தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
( யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் கண்யத்திற்கு ஏற்ப வந்து சேரும். வஸ்திரம் இரத்தினபரணம் தரும். வீடுவாகனபிராப்த்தி யில் நல்ல சௌகரியம் தரும். மார்ச்சு 10உ க்கு ஆண்மகவு ஒன்று உண்டாகும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் ஓர் ஒப்பந்தம் ஏற்படும். அதிகசிரத்தை மேற்கொண்டு ஏற்றுக் கொண்ட காரியங்களை நடத்துதல்ஆகும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம்நிலவும். பிப்ரவரி 13, 14, 19, 20, 21, 22, 25, 27, மார்ச்சு 1, 2, 3, 10, 11, 12 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 15, 16 மார்ச்சு 13 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம்¾ - திருவோணம் - அவிட்டம் ½
( போ. ஜ. ஜி. - கி. கு கே கோ கா. கி - )

மகர ராசி 9 பாகங்களு மிச்சிர பலனாகநடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் கணிசமாகவரும். அதற்கேற்ப தர்மகாரியங்களில் செலவினங்களும் ஏற்படும். வீடு வானங் களில் நல்ல சௌகரியம் இருந்து வரும். புத்திரி அல்லது பௌத்திரிக்கு சுபம் ஏற்படும். ஜீவனோபாயங்களில் நல்லன ஏற்பட்டுக் கொண்டிருக்கும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். பிப்ரவரி 13, 14, 15, 21, 22, 23, 24, 25, 29, மார்ச்சு 4, 5, 11, 12, 13 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 17, 18 தேதிகளில் சந்திராஷ்டமம். மத்திம பலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்ப ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானங்களை ஏற்படுத்தும். அவசியமாக சுபச் செலவுகளும் ஆகும். புத்திரர் மனைவி இவர் களின் நலன்களுக்கு முதலீடு செய்யும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்துவரும். எல்லா காரியங்களையும் முன்

வரையறுத்துள்ள படிக்கு நடத்துதல் ஆகும். பிப்ரவரி 15, 16, 17, 18, 23, 24, 25 மார்ச்சு 2, 3, 6, 7, 8, 13 தேதிகளில் விசேஷ தனலாபம், ஜெயம், உற்சாக சம்பவம் ஏற்படும். பிப்ரவரி 19, 20 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

12. மீனம்:- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.

( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீன ராசி 9 பாதங்களும் மிச்சிரப்பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்களில் மந்தஸ்திதியில் தோன்றி னும் முக்கிய பிரச்சனைகளுக்கு பணம் வந்து சேரும். வித்தியா வியாபாராதிகளில் விளம்பரம் முதலியவற்றில் பணம் முடங்கச் செய்யும் வீடுவாகனங்களில் நவீன அமைப்பினை ஏற்படுத்தும். தாரபுத்திரர்களின் நலம் நன்றுக இருந்து வரும். பிப்ரவரி 17, 18 19, 20, 24, 27, 28, 29 மார்ச்சு 1, 4, 5, 9, 10. தேதிகளில்தனுதாயம் காரியஜயம், நல்ல மனிதர் சந்திப்பு. உற்சாகம் முதலியவற்றில் நற்பலன் ஏற்படும். பிப்ரவரி 21, 22 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.



---

கடிதம் :

## இளைஞர் அருள்நெறி மன்றம்

திருக்கோணமலை. ( இலங்கை )

* சென்ற புரட்டாசித் திங்கள் "ஞானசம்பந்தம்" இம் மாதந்தான் கிடைத்தது. காரணம், இங்கு-இலங்கையில் கடிதப் போக்குவரத்தில் ஏற்பட்டுள்ள தாமதமே என்பதையும் பணி வன்புடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

செந்தமிழ்ச் சைவஉலகுக்குக் குருமணியாக விளங்கி யருளும் சுவாமி,

சென்ற புரட்டாசித் திங்கள் "ஞானசம்பந்தம்" இதழில் வெளிவந்துள்ள, "பண்பாடு காத்துப் பாரினை உயர்த் துவோம்" என்றவிடயம் இப்பொழுது உலகத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கடியால் அல்லல்படும் மனித இனத்துக்கு நல்லதொரு

அறிவுரை என்றே நாம்கருதுகின்றோம். அந்த விடயத்தில் சனநாயகத்துக்கும், சர்வாதிகாரத்துக்கும் அளிக்கப்பட்டுள்ள விளக்கம் அருமையாக அமைந்துள்ளது. " நஞ்சை மட்கிண்ணத்தில் கொடுத்தால் என்ன ? பொற்கிண்ணத்தில் கொடுத்தால் என்ன ? நஞ்சு நஞ்சுதானே " என்ற உதாரணத்தால் படித்தின்புற்று உண்மையை விளக்கிக் கொள்ள முடிகிறது. இக்காலத்தில் எவ்வளவோ பெரிதாக வளர்ந்துள்ள விஞ்ஞானத்தின் பெருமையைப் பெரிதாக எண்ணுகின்றவர்களுக்கு, " விண்ணில் இடம்பிடிக்கக் கற்றுக் கொண்ட விஞ்ஞானம், அண்டை வீட்டு மனிதனின் நெஞ்சில் இடம் பிடிக்கக் கற்றுக்கொள்ளவில்லை " என்ற உதாரணமொழி மெய்ஞானத்துக்கு அரண்செய்து நிற்கின்றது. அத்துடன் விஞ்ஞானத்தில் தரக்குறைவையும் நமக்கு எடுத்து விளக்குகின்றது. அத்துடன், " ஞானசம்பந்தம் " இதழில் வெளியிடப்பட்டுள்ள மேற்படி விடயத்தை இலங்கையில் அனைவரும் அறிதல் வேண்டும் என்ற எண்ணத்துடன், இங்கு வெளியாகும் திங்கள் வார வெளியீடுகளில் – அதுவும் தரமான ஆத்மீக வெளியீடுகளில் வெளியிடுவதற்கு ஒழுங்கு செய்துள்ளோம். இந்த முயற்சியைத் தாங்கள் திருவுள்ளங்கொண்டு ஆதரித்தருள்வீர்கள் என்பதில் நம்பிக்கையுடையோம் சுவாமி.

மனித சமுதாயத்தின் வளமான வளர்ச்சியில் கருணையுள்ளங் கொண்டருளும் பெருமானே, சென்ற ஆண்டில் திருத் தருமையாதீனத்தின் அருளாட்சிக்குட்பட்டு விளங்கும் அருள்மிகு வைத்தீஸ்வரன்கோயிலில் களவாடப்பட்ட திருவாபரணங்கள் கிடைத்தமைபற்றி அறிந்து பெருமகிழ்ச்சியடைகின்றோம். குருமகாசந்நிதானத்தின் அசைக்க முடியாத பிரார்த்தனையும் நம்பிக்கையும் வெற்றியளித்துள்ளமையை அறிந்து செந்தமிழ்ச்சைவஉலகம் ஆனந்தமடையும்என்பதில்நம்பிக்கையுடையோம். மேலும், இலங்கைவாழ் தமிழினத்தவர்கள் மீது குருமணியவர்கள் காட்டும் பெருங்கருணை, அல்லல்படும் நமக்குப் பேராதரவு அளிக்கின்றது. தங்கள் திருவுள்ளத்தின் பேரன்பும் பேராதரவும் என்றென்றும் வாழ்க – வளர்க – வழிகாட்டியருளுக. பிரார்த்திக்கின்றோம் சுவாமி. சிவ சிவ

" என்றும் வேண்டும் இன்ப அன்பு "

தங்கள் திருவடிகளுக்குள் பணிவன்புள்ள,
அடியேன்.
**இ. சண்முகராசா,**
மன்றச்செயலாளர்

23—1—84.

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜென்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாளில் தேவாரப் பாடல்பெற்ற சிவதலங்களில் சிறப்பு வழிவாடுகள் நிகழ்ந்துவருகின்றன. அன்பர் பலரையும் இறைவழிபாட்டு நெறியில் ஈடுபடுத்திவரும் ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு பவானி என வழங்கும் திருநணுவில் 20—1-84 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. இத்தலம் தமிழ்நாட்டின் திரிவேணி சங்கமம் எனக் கூறும் வகையில் காவிரி, பவானி, அமுதநதி ஆகிய மூன்று நதிகள் கூடி விளங்குவது. திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத் திருப்பதிகம் பெற்றதலம். பவானி தலத்தில், சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷே ஆராதனைகள் நடைபெற்றன. திருநணு (பவானி) திருப்பதிகம் பாராயணம் செய்யப்பெற்றது. 'திருநணு, திருக்கொடிமாடச் செங்குன்றூர்த் திருப்பதிகங்கள்' என்ற நூல் வெளியிடப்பெற்றது. அன்பர் பலர் வழிபாட்டில் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

ஆங்கிலமாதமுதல்ஞாயிறன்று காலை சரியாக 10 மணிக்குத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை அன்பர்கள் வணங்கி வழிபட்டு அருளுபதேசம்பெறும் பிரார்த்தனை வழி பாட்டுக் கூட்டம் ஆதீனத் திருமடத்தில் நிகழ்ந்து வருகின்றது. இம்மாதம் 5—2—84 அன்று 32 ஆவது வழிபாட்டுக் கூட்டம் நடைபெற்றது. அன்பர்கள் திருநீறுபெற்றுக்கூட்டுப்பிரார்த்தனை நிகழ்த்தினர். அடுத்துத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அருளுபதேசம் வழங்கினர்கள்.

இம்மாதம் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாக ஆனாய நாயனார்புராணம் உபதேசிக்கப்பெற்றது. இசை இறைவன் திருவருளைப் பெறுதற்கு உரியது என்னும் தத்துவத்தை ஆனாயர் வேய்ங்குழல் வாயிலாகப் பஞ்சாட்சரம் இசைத்துத் திருவருள் பெற்றமைகொண்டு விளக்கினர்கள். ஆரோசை, அமரோசை என்னும் ஆரோகணம், அவரோகணத்தைக் குறிக்கும் சொற் களின் சிறப்பையும் சேக்கிழார் காட்டும் இசைத்தமிழ்ச் சொல்

லாட்சி மாண்பையும் சிறப்பாகப் புலப்படுத்தினார்கள். பசுக்களைப்பாதுகாத்தல் என்னும் உயர் அறத்தைத் திருமூலர், சண்டீசர், ஆனாயர் வரலாற்றுடன் ஒப்பிட்டருளியமை ஆய்வு நோக்குடன் கேட்கவும் சிந்திக்கவும் மிகவும் இனிமையாய் இருந்தது.

மயிலாடுதுறை நகரப்பெருமக்களும் அன்பர்களும் கலந்து கொண்டு பயன்பெற்றனர். அடுத்து 33 ஆவது அருளுபதேசம் 4—3—84 அன்று நிகழ்வுறும். அன்பர்கள் கலந்துகொண்டு பயன் பெறுவார்களாக.

## ஸ்ரீ மௌன குரு. ஸ்ரீ தாயுமானவசுவாமி குருபூஜைவிழா

இவ்விழா 26—1—84 வியாழக்கிழமை தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்த திருச்சி மௌனமடத்தில் நடைபெற்றது. இவ்விழாவினை ஒட்டி காலை 6 மணி அளவில் அடிவாரத்தில் இருக்கும் ஸ்ரீ மாணிக்கப் பிள்ளையாருக்கும், காலை 9 மணி அளவில் மலை மேல் வீற்றிருக்கும் ஸ்ரீ உச்சிப் பிள்ளையாருக்கும், மதியம் 12 மணி அளவில் திருச்சி மலைக்கோவில் ஸ்ரீ தாயுமானவசுவாமி, அம்பாள் ஸ்ரீ மட்டுவார் குழலம்மை மற்றும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடந்தேறின. இவை முடிந்தபின், மௌனமடம் முகப்பில் உள்ள ஸ்ரீ முத்துக்குமரசுவாமிக்கு விசேஷ அபிஷேக, ஆராதனையும், மௌனமடத்து பூஜை மடத்தில் கட்டளைத் தம்பிரான் சுவாமிகளால் குருபூஜை ஆராதனையும் சிறப்பாக நடந்தது. மதியம் 1 மணிக்கு மௌனமடத்தில் மாகேசுவரபூஜையும் நடந்தது. ஸ்ரீ தாயுமானசுவாமி திருக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில், மேற்படி விழாவினை ஒட்டி, பக்திப்பாடல்கள் மற்றும் ஆய்வரங்கம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மாலை 6 மணிக்குத் தொடங்கிய இந்நிகழ்ச்சியில், அண்மையில் திருச்சியில் ஸ்ரீலஸ்ரீ தருமை ஆதீன குருமகாசந்நிதானம் அவர்கள் முன்னிலையில் மதமாற்றம் செய்து கொண்ட திரு. T. M. மாரியப்பசுவாமி குழுவினரால் இன்னிசைப் பக்திப் பாடல்கள் பாடப்பட்டன. ஆய்வரங்கத்தில்தொடக்கத்தில்கட்டளைத்தம்பிரான்வித்துவான் ஸ்ரீமத். மௌன மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள் எல்லோரையும் வரவேற்றுப்பேசினார். ஆய்வரங்கத்துக்குக் கவிதாமணி அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். திரு. ப. முக்கப்பிள்ளை அவர்கள் தொடக்க உரையாற்றினார். ஈ வே. ராமசாமி. கல்லூரி பேராசிரியர் திரு கே. நடராஜன் M. A., அவர்கள் "மூலன் மரபில் வரு மௌனகுரு" என்ற தலைப்பிலும், திருச்சி, திருக்குறள் கழகம் செயலாளர், திரு. காசி விஸ்வநாதன் அவர்கள் "ஆனந்தமான பரம்" என்ற தலைப்பிலும், திருமுறைச் செல்வர் புலவர் திரு.

மு. கணபதி அவர்கள் "சொல்லரிய நெறியை ஒரு சொல்லால் உணர்த்திய சின்மயானந்த குரு" என்ற தலைப்பிலும் சிறந்த வகையில் சொற்பொழிவாற்றினர்கள். தலைவர் பின்னுரைக்குப் பின், நன்றி நவிலப்பட்டுக் கூட்டம் இனிது முடிவுற்றது கடைசியாக, இரவு 9 மணி சுமாருக்கு திருச்சி மௌனமட பூஜைமடத்தில் குருபூஜை நடந்து, விழா முடிவடைந்து, அன்பர்களுக்குத் திருவருட் பிரசாத பைகள் வழங்கப்பட்டன.

## மயிலாடுதுறை-ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றத்தினரின் தேவாரத் தலயாத்திரை

மயிலாடுதுறை ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றத்தினர் 31—7—83 தொடங்கி உந்தூர்தி (வான்) மூலம் ஒவ்வொரு ஆங்கிலமாதமும் இரண்டாவது ஞாயிறுதோறும் தேவாரத் தல யாத்திரை செய்து பாடல் பெற்ற தலங்களை வழிபாடு செய்து வருகின்றனர். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்ததிபர் கயிலைமா முனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் தலைமையில் நிகழ்வது குறிப்பிடத்தக்கது.

21—8—83 திருமுதுகுன்றம், திருப்பெண்ணாகடம், திரு எருக்கத்தம்புலியூர், திருநெல்வாயிலரத்துறை, திருக்கூடலை யாற்றூர், திருநல்லூர்ப் பெருமணம்.

28—8—83 திருக்கடைமுடி, தலைச்செங்காடு, திருவலம்புரம், சாயாவனம், பல்லவனீச்சரம், திருவெண்காடு, தென்திருமுல்லை வாயில், திருக்குருகாவூர், திருக்கோலக்கா.

18—9—83 திருநின்றியூர், திருக்கண்ணார்கோயில், திருப் புன்கூர், திருக்கருப்பறியலூர், மண்ணிப்படிக்கரை, பந்தணை நல்லூர், திருக்கோடிக்கா, திருக்கஞ்சனூர், திருமணஞ்சேரி, திருத்துருத்தி

30—10—83 திருவாவடுதுறை, தென்குரங்காடுதுறை, திரு நீலக்குடி, திருவைகல், திருப்பனந்தாள், திருமங்கலக்குடி, திரு வேள்விக்குடி, திருஅண்ணியூர்.

10—11—83 திருநாகை, சிக்கல், கீழ்வேளூர், தேவூர்.

27—11—83 திருவிளநகர், பறியலூர், செம்பொன்பள்ளி, நனிப்பள்ளி, ஆக்கூர், திருக்கடவூர், திருக்கடவூர்மயானம், திரு வேட்டக்குடி, தெளிச்சேரி, தருமபுரம், திருநள்ளாறு, திருக் கோட்டாறு.

21—1—84 தேரழுந்தூர், திருக்கோழம்பம், திருநல்லலம், திருக் கருவிலி, திருஅன்னியூர், திருவீழிமிழலை, சிறுகுடி, திலதைப்பதி அம்பர்மாகாளம்.

( 144 ஆம் பக்கத் தொடர்ச்சி )

அடுத்து, புல்லாங்குழல் வாசிப்பதின் அருமைகளை விளக்கினார்கள். வாய்ப்பாட்டுப்பாடுகிறவனுக்குச் சாரீரம் துணையாகிறது, அது போலவே புல்லாங்குழல் வாசிக்கிறவருக்குக் கைவிரல்களும் வாய்க்காற்றும் துணையாக இருக்கின்றன.

இப்படி மிகவும் முயன்று வாசிக்கக் கூடிய வேய்ங்குழலில் பஞ்சாட்சரம் வாசிப்பது என்பது மிகவும் அருமையானதே என்று ஆனாயர் தொண்டின் சிறப்பினைக் குறிப்பிட்டார்கள்.

மேலும் இசையில் ஆரோகணம், அவரோகனம் என்ற சொற்களின் அமைப்புப்பற்றி அருளி இவற்றைச் சேக்கிழார் முறையே " ஆரோசை, எனவும், ' அமரோசை ' எனவும் வழங்கியமையையும், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி தாரம், என்னும் அமைப்புத் தமிழில் விளங்கியமையையும் குறித்ததுதமிழிசை நூற்கருத்து விளக்கமாய் அமைந்தது.

பண்களின் அமைப்புப்பற்றி விளக்கும் போது மேகராகக் குறிஞ்சிப் பண் மழைபெய்யக்காரணமாக விளங்கும் தன்மையைச் சுட்டி உலகியல் உதாரணங்கள் சிலவற்றையும் அருளினார்கள்.

அப்படி அவர்கள் விளக்கும்போது " இசையாயினும் சரி; மற்று எது வாயினும் சரி; இறைவன் நினைப்பு இன்றிச் செய்யப்படுவது ஒரு போதும் பலனைத் தராது " - என அருளியமை குருநாதரின் இனிய உபதேசம்! இன்றைய உலகுக்குத் தேவையான அருள்மொழி!

ஆனாயர் வரலாற்றை அருளும்போதே - ஓர் ஒப்பாய்வாக நாயன்மார் வரலாறுகளில் கோ சம்ரட்சணை-அதாவது பசுவைப் பாதுகாத்தல் என்னும் உயர்ந்த அறத்தைச் செய்த அடியார்கள் மூவர்பற்றிக் குறித்தார்கள்.

இடையர் குலத்தில் அவதரித்த ஆனாயர் பசுக்கூட்டங்களை இனிது ஓம்பினார் !

அந்தணர் குலத்தில் அவதரித்த சண்டீசர் தம் பெற்ற விசாரசர்மர் பசுக்குலம் காத்துப் பாலபிஷேகம் செய்தவர் !

கயிலாயச் சித்தராகிய திருமூலர் பூவுலகத்தில் அகத்தியரைக் காணவந்தபோது இறையருள் காரணமாக ஆநிரை மேய்க்கும் சிறப்புற்றார் !

இப்படித் தொகுத்து அருளிய குருமணிகள் ' இடையர் ' என்றசொல் பற்றியும் ஒருகுறிப்பு நல்கினார்கள். இடைநிலமாகிய முல்லை நிலத்துக்கு உரிய மக்கள் இடையர் எனப்பட்டனர் என்பது அது.

அடுத்து 'இடையர்' என்பாரும் யாதவரும் ஒரே குலத்தினரா?

இது ஒரு பொதுவான ஐயம். இந்த ஐயத்தையும் குருமணிகள் நீக்குகிறார்கள்.

"இடையர் வேறு; யாதவர்வேறு. யதுவம்சம் என்பதினின்றே யாதவர் என்ற குலப்பெயர் தோன்றிற்று." "அப்படியென்றால் இரண்டையும் ஒன்றாகவே மக்கள் கருதக் காரணம் இருக்கவேண்டுமே" என்று நாம் கருதும்போதே இரண்டையும் ஒன்றாகக் கருதுவதற்கான காரணத்தையும் அருளுகிறார்கள்.

கிருஷ்ணபகவான் யதுவம்சத்தில் அவதரித்தார்; இடையர் குலமக்களின் மத்தியில் வளர்ந்தார்; இதனால்தான் இரண்டையும் ஒன்றாகவே கருதுகின்றனர்; தவறாகப் புரிந்துகொண்டதுதான் காரணமேயன்றி - யாதவரும் இடையரும் ஒரு குலத்தினர் அல்லர் என்ற உண்மையைத் தெளிவித்தார்கள்.

அடுத்து ஆனாயர் அவதரித்த நாடு மழநாடு என அருளி விளக்கினார்கள். திருச்சி மாவட்டம் மழநாடு ஆகலாம் எனக் குறிப்பிட்டார்கள். ஞானசம்பந்தர் கொல்லி மழவன் மகளது முயலக நோயினைத் திருப்பாச்சிலாச்சிரமத்தில் - அதாவது மேல்மழ நாட்டில் - தீர்த்தருளினார் என்ற குறிப்பை இதற்கு ஆதாரமாக அருளினார்கள்.

நாயனார் அவதாரத்தலத்தைச் சுந்தரர் "அலைமலிந்த புனல் மங்கை" எனக் கூறுகிறார். மங்கை எனக் குறிக்கப்படுவது மங்கலம் என்பதன் மரூஉ. திருமங்கலம் என்று வழங்கும் இவ்வூர் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள - லால்குடி என வழங்கும் திருத்தவத்துறைக்கு வடமேற்கே பூவாளூர்க்கு அண்மையில் இருப்பது" - இவ்வாறு ஆனாயர் அவதாரத் தலத்திற்குச் செல்லும் வழியையும் இயம்புகின்றார்கள். தல்வரலாற்றில், 'மன்மதனை அழித்த இடம் இது' எனக் குறிக்கப்பெற்றுள்ளது எனவும் ரதி மீண்டும் மன்மதனைப் பெறுதற்குத் தவம் செய்த தலம் திருத்தவத்துறை (லால்குடி) எனக் கூறப்பட்டுள்ள ஐதிகத்தையும் தெளிவுறுத்தினார்கள். மேலும் மழநாடு அணிகலன் போலவும் அதில் திருமாங்கல்யும் போலத் திருமங்கலமும் அமைந்தன - இவ்வாறு சிறப்பான சிந்தனையையும் நமக்குவழங்கினார்கள். ஆனாயர் பசுக்கூட்டங்களை மேய்த்த நிலையிலும் - இறைவனைக் கண்டார். ஒவ்வொரு பொருளிலும் சிவனைக் கண்டார்.

கார்காலம்! செல்லும் வழியில் ஒரு கொன்றை மரத்தைக் கண்டார் ஆனாயர். அதில் மாலைபோன்று பூங்கொத்துக்கள் நிறைந்திருந்தன. அக்கொன்றைமரம் அவருக்குக் கொன்றை

யணி வேணியனை நினைப்பித்தது: அன்புகரைபுரண்டது; குழலை, ஏந்தினர். திருவைந்தெழுத்தை உள்ளுறையாகக் கொண்டு மனமுருகி இசைமாரிபொழிந்தார். இவ்வாறு ஒரு கொன்றை மரத்தைக் கண்ட போதே சிவனைக்கண்ட ஆனயர் செய்த தொண்டோ மிகச் சீரிய தொண்டு! பசுக்கூட்டங்களைக் காப்பது சிவனுக்குச் செய்யும் தொண்டு என்பதைக் குருமணிகள் பற்பல எடுத்துக் காட்டுக்கள் மூலம் விளக்கினர்கள்.

"உடல் உயிர் இரண்டையும் வளர்ப்பது ஆநிரை; அது, தன் இனத்தை வளர்ப்பதோடு மனித இனத்தையும் அல்லவா வளர்க்கிறது" – ஆம்! எவ்வளவு தீர்க்க தரிசனமான அருளுரை! மேலும் தொடர்கிறார்கள்; பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் ஐந்தையும் தரும்பெருமை அதற்கு உண்டு! திருநீறும் அது தருவது தானே! இவ்வாறு பசு தரும் பொருள்கள் பற்றி எடுத்துக்காட்டும் அருளினர்கள்

ஆனயர் சிறப்புக்களை யெல்லாம் மனம் கொள்ளும் வண்ணம் அருளிய குருமணிகள்—உரையால்—உணர்வால் செயலால் தொண்டு செய்யவேண்டிய இன்றியமையாமையைப் பல மேற்கோள்கள் காட்டி அறிவுறுத்தினர்கள். 'நம் உடலில் உள்ள ஒவ்வொருஉறுப்பும் இறைவனுக்குத் தொண்டுபுரியவே அமைந்துள்ளது; அவ்வகைத் தொண்டு புரியா விட்டால் இழிப்பு நமக்குத்தான்' என்பதை மிக நுட்பமாக தளிவாகத் தக்க வரலாறுகளுடன் நமக்கு உணர்த்தினர்கள்! தெளிய வேண்டுவது நம் பொறுப்பு!

ஆனயர் இசைகேட்ட இறைவன் அம்மையுடன் எழுந்தருளி அருள் செய்த பாங்கினைச் சேக்கிழார் பாடல் கொண்டு விரித்தார்கள்.

ஆனயர் குழலோசை கேட்டருளி அருட்கருணை
தானய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்
கானதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து
வானறு வந்தணைந்தார் மதிநாறும் சடைதாழ.

இறைவன் இசைக்கு முதற்காரணன்; அவ்விறைவன் "இந்நின்ற நிலையிலேயே நம்பால் வந்தணைவாய்" என அருளினர்; ஆனயரும் பொன்னம்பலத்திடை புகுந்தார்.

இப்படி வரலாற்றுக்குள்ளே பொதிந்த தத்துவங்களை எல்லாம் ஆங்காங்கே விளக்கினர்கள்! தத்துவம் தெரியாமல் வரலாறுகளை எல்லாரும் அறிந்து கொள்ளலாம்! தத்துவத் தெளிவு தருமையில் கிடைக்கும்! குருமணிகளின் உபதேசங்களைக் கூர்ந்து கேட்டால் போதும்; சிந்திக்கத் தூண்டும்; சிந்திக்கத் தொடங்கினல் போதும்; செயற்பாடு தோன்றும்! செயற்பாடு சிவநெறி சேர்க்கும்.

சிவநெறிவளர்க்கும் குருமணிகளின் திருவடிகளை மனத்தில் துதித்தவாறே இல்லம் செல்கிறோம்.

வாழ்க குருமணிகள்!

# கேதாரம் நோக்கி....!

திரு. வி. ஆறுமுகம் ஐ. ஏ. எஸ். (ஓய்வு)

( மலர் 43, இதழ் 2, பக்கம் 128 இன் தொடர்ச்சி )

## 5. கங்கோத்திரி

புண்ணியம் அங்கே புகலிடம் கொண்டிருக்கிறது! அழகு அங்கே ஆனந்தத்தாண்டவமாடுகிறது! அதுதான் கங்கோத்ரி! பகீரதி ஆற்றின் இடப்புறம், ஆசிரமங்கள், தர்மசாலைகள், உள்ளன. கடல் மட்டத்தில் இருந்து 11,800 அடி உயரம். பைன் மரங்களும்மற்றும் அடர்ந்து பருத்த பலவகை அரிய மரங்களும் அங்கே செழித்து நிற்கின்றன. ஆற்றின் வலப்பக்கக் கரையில் கங்காமாதா கோயில் உள்ளது. தெற்கு நோக்கிய சந்நிதி. இந்தக்கோயில் அமர்சிங்தாப்பா என்பவரால் கட்டப்பட்டது என்கின்றனர்.

கங்காதேவி கோயில் பூசகரின் தோற்றம் நமக்கு வியப்பை உண்டாக்கும். ஒரு நீண்டகோட் அணிந்திருப்பார் தலைப்பாகை கட்டியிருப்பார். அங்கவஸ்திரம் போன்ற ஒரு நீளமானதுணியைச் இடுப்பில் கோட்டின்மேல் சுற்றியிருப்பார். அது அந்தப்பகுதியின் ஆசாரம்! பூசை செய்வோர் முக்வா என்ற கிராமத்து நம்பூதிரிகள்.

பூசை ஒழுங்காக நடைபெறவேண்டுமே! நல்ல வருமானம் வேண்டுமே - இதற்காக, கங்கோதரிக்கும் முக்வாவுக்கும் இடையில் உள்ள காடுகளைக் கோவிலுக்கு இனமாக விட்டுள்ளனர் என அங்குள்ளோர் கூறினர்.

நிர்வாகம் எப்படி நடக்கிறது என அறிவதில் அக்கறை தோன்றுவது இயற்கைத்தானே! முக்வாகிராமத்து நம்பூதிரிகளில் பத்துப்பேர் தேர்வுசெய்யப்பட்டு இக்கோயிலை நிர்வகிக்கின்றனர்.

கோயில் பூசையின் போது ஐந்து அடுக்குத் தீபாராதனை செய்யப்படுகின்றது. அப்போது கர்ப்பக்கிருகத்திற்கு வெளியில் கையில் வெள்ளிச் செங்கோலுடன் ஒருவர் நிற்கிறர். மற்ெருரு

வர் வெண்சாமரத்தைக் கையில் ஏந்தி வீசுகிறார்; கோயில்பூசகர் வெளியில் வந்து கங்காமாதாவுக்கு ஆராதனைகள் செய்யும் போதும்வெள்ளிச்செங்கோல், வெண்சாமரம் என்னும்மரியாதை கள் நிகழ்வது ஓர் இனிய காட்சி! அரிய காட்சி!

கிராம நிர்வாகம், கோயில் நிர்வாகம் ஆகியவை உள்ளூர்த் தாசில்தார், முக்வாகிராமமுக்கியஸ்தர், தார்வாலிகிராமமுக்யஸ் தர், கங்கோத்ரியிலுள்ள இரண்டு சந்நியாசிகள் அடங்கியஐவர் குழுவால் சிறப்புற்று விளங்குகின்றது.

புனித கங்கை பூமிக்கு வந்த வரலாறு புதியதன்று! புராண வரலாறுதான்! கங்கையை நிலவுலகுக்கு க்கொண்டுவர நீண்ட முயற்சி செய்தான் அனுசுமன்; அவனுக்குக் கங்கை கிடைக்க வில்லை; தோல்விதான் கிடைத்தது! அவன் மகன் திலிப்; அவனும் தோல்வியையே தழுவினான்! அனுசுமனின் பேரன் பகீரதன். பகீரதன் விடாமுயற்ச்சியுடன் தெய்வ சிந்தனை அகலாது தவம் செய்தான்; பயன் கிட்டியது. தேவலோக கங்கை மனம் இரங்கினாள், சிவபிரானது ஜடாமுடியில் வந்து தங்கினாள். அதன்பின் பகீரதன் சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான்; பெருமானும் கங்கையின் வேகத்தை அடக்கிப் பூமிக்கு வருமாறு அருள் செய்தார். அப்படி வந்த கங்கையின் ஒபருகுதிக்குப் பெயர் – பகீரதன் தவம் காரணமாக வந்தமை யால் – பாகீரதி என வழங்குகின்றது.

கங்காதேவிகோயிற் பகுதியில் பகீரதன் அமர்ந்து தவம் செய்ததாகக் கூறப்படும் கல் ஒன்று உள்ளது. அதனைப் ' பகீரதன் கல் ' என்கின்றனர்.

இந்த கங்கோத்ரி பகுதியில் ' கேதார் கங்கா என்ற சிற்றாறு ஒன்றும் பாகீரதி நதியுடன் கலக்கிறது.

இந்தப் பகுதிக்கு அப்பால் உள்ளது தேவிகட். இது பனி மலை அற்புதமான அழகின் பிறப்பிடம்! இரவு முழுநிலா நாளிலும் காலைக் கதிரவன்தோற்றத்திலும் தேவிகட்டின் அழகைக் காணும் பாக்கியம் இறையருளால் எங்களுக்குக் கிடைத்தது. வெளிநாட்டாரும் வியக்கும் இனிய விருந்து படைக்கும் தேவிகட்டின் அழகைச் சொற்களால் வருணிப்பது பொருந்தாது; நேரில்தான் அதனை ரசிக்கவேண்டும்.

வெள்ளிமலை போல் உள்ள சிகரத்திலிருந்து கங்கை ஓடி வருகிறது. கௌரி குண்டத்திலிருந்து நின்று அந்த அழகை

பார்க்கிறோம். ஓடிவரும் கங்கை குண்டத்தில் விழுகிறது - நாம் வியக்கிறோம்! ஏன்! அது சுடலைப்பொடி பூசியபெருமான் சடா முடியிலிருந்து கீழிறங்கிவருவது நம் அகக்கண்ணில் தெரிகிறது! ஆனந்தம் ...... ஆனந்தம்! கங்கோத்திரியில் மூழ்கிவிட்டால் போதும்; பாவம் ஒழியும். உள்ளும் புறமும் தூய்மை பெறுவோம். இது நம்பிக்கைமட்டும் அல்ல; நம் சமயஉண்மை யும்கூட.

பாகீரதியில் விழுந்துஎழுந்தோம். விழுந்துஎழுந்தோம் என்று ஏன் எழுதுகிறேன், என்றால், பனிக்கட்டி போல்-மிகவும் குளிர்ச்சி பொருந்திய அந்த நீரில் முழுகி எழுந்து ஓர் ஐந்து நிமிடம் நிற்கக்கூட முடியாது. உடம்பே விரைத்துபோகும்; இரத்தம்கூட உறைந்து போகும்.

புனிதநீரை எடுத்துக் கொண்டோம். கங்கா மாதாவுக்குப் பூசை நிகழ்ந்தது; வழிபட்டோம். பயணிகள் விடுதியில் அன்று இரவு உறங்கினேம்.

## 6. கோமுகி

"கங்கோத்தரியிலிருந்து 9 கி. மீ. தொலைவில் 'கோமுகி' என்னும் இடம் உள்ளது; நடந்துதான் செல்ல வேண்டும். கங்கோத்ரி மலைச்சிகரங்களுக்கு இடையில் 'கோமுக்' என்னும் பனிக்கட்டி ஆறு உள்ளது. கடல் மட்டத்திலிருந்து இதன் உயரம் 16,000 அடி. 24 கி. மீ. நீளமும், 8 கி. மீ. அகலமும் கொண்டது இப்பனிக்கட்டி ஆறு. நீலம், பச்சை, மஞ்சள் நிறங் களை அள்ளிவீசும் அதன்வர்ண ஜாலங்களைவருணிக்கவார்த்தை ஜாலங்களைக் காட்டிவிட முடியாது! அங்கு பரவாஞ் ஆசிரமம் உள்ளது. அவ்வாசிரமத்தில் உள்ள சந்நியாசிகள் யாத்திரிகர் களுக்கு வசதிகள் செய்து கொடுப்பதாய்ச் சொல்கிறர்கள். அக்டோபர் மாதம் முதல் ஜூன் வரை இப்பகுதியில் பனி நிறைந்திருக்குமாம்" - இவ்வாறு ஹரித்துவாரில் லட்சுமிசந்தி என்ற மண்பாறை, ஆராய்ச்சி நிபுணர் கூறியிருந்தார். அவசியம் போய்ப்பார்க்க வேண்டும் என்று விரும்பினேம்.

கயிலை மாமுனிவரிடமும் இதுபற்றி விண்ணப்பித்துக் கொண்டேன். "போய்வர இரண்டுநாட்கள் ஆகும். நடந்து செல்லக் கூடியவர்கள் மட்டும் சென்று காணலாம்" என்று இசைவும் அளித்தார்கள். ஆனல் திருவருள் கிட்டவில்லை! கற்பனையில் கண்டோம்; என்று கிட்டுமோ அந்தப்பேறு!

தொடரும்

அறிக்கை எண் - 4.

## அனைத்துலக

# முதல் சைவசித்தாந்தக் கருத்தரங்கம்

## அறிவிப்பு

தருமையாதீனமும், திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழகமும் இணைந்து தருமபுரத்தில் பிப்ரவரி 3, 4, 5 தேதிகளில் நடத்த இருந்த அனைத்துலக சைவசித்தாந்தக் கருத்தரங்கம் அடைமழை முதலிய சிலதவிர்க்க முடியாத காரணங்களால் சிலவாரங்கள் ஒத்திவைக்கப்பட்டிருந்தது. அன்பர்கள் பலரும் ஆவலோடு எதிர்பார்த்திருக்கும் அக்கருத்தரங்கினை வரும் ஏப்ரல் திங்கள் இறுதியிலோ, மே முதல் வாரத்திலோ நடத்துவ தென முடிவு செய்யப்பட்டுள்ளது. கருத்தரங்கத் தேதிகள் விரைவில் முடிவு செய்யப்பெற்று ஞானசம்பந்தம் இதழிலும் ஏனைய நாளிதழ்களிலும் அறிவிக்கப்பெறும்.

கருத்தரங்க ஒத்திவைப்பு பல நன்மைகளை நமக்கு விளைத்துள்ளது. ஒத்திவைப்பு நாட்கள் பல நூல்கள் உருவாகத்துணை செய்துள்ளன.

சைவ சித்தாந்தத்தில் கூறப்படும் முப்பொருள் விளக்கங்கள், தமிழகச் சைவத்திருமடங்கள், தமிழகப் பல்கலைக் கழகங்களின்வரலாறு முதலியபலகட்டுரைகளோடுவண்ணமலர் ஒன்று கருத்தரங்கச் சிறப்பு மலராக மலர உள்ளது.

சைவசித்தாந்தம் பற்றி மேலை நாட்டறிஞர்களில் ஹாய்சிங்டன், கௌடி, பார்னட் முதலிய இருபதுக்கு மேற்பட்டோர் போற்றிப்பாராட்டிய ஆங்கிலக் கட்டுரைகள் அடங்கிய முதல் தொகுதி நூலும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பல்வேறு விழாக்களில் வழங்கிய அருளுரைகளின் தொகுப்பாகிய திருவருட்செய்தி இரண்டாம் தொகுதி நூலும், சிவஞானபோதச் சிற்றுரைக்கு மகாவித்துவான் திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் எழுதியுள்ள உரை விளக்க நூலும், விளக்கக் குறிப்புரைகளுடன் திருமந்திரம் இரண்டாம் தொகுதி நூலும், (4, 5, 6 ஆம் தந்திரங்கள்) திரு. மு. அருணாசலம் அவர்கள் பதிப்பித்த சதமணிக்கோவை என்னும் சாத்திரநூலும் வெளிவரவுள்ளன. திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் சைவ சித்தாந்தம் பற்றிஎழுதிய நூல் ஒன்றை விழாவில் வெளியிட உள்ளார். கருத்தரங்கில் 60 க்கு மேற்பட்ட, பல்வேறுநாட்டைச் சேர்ந்த சித்தாந்த வல்லுநர்கள் ஆய்வுக்கட்டுரைகள் வழங்க உள்ளனர். விழாவில் பங்கேற்க விழையும் பார்வையாளர்கள் ரூ. 30—00. கட்டணம் செலுத்தித் தங்கள் பெயரைப் பதிவு செய்துகொள்ளலாம்.

---

# இரத்தாக்ஷி ஆண்டு

## சைத்ர, வைசாக உற்சவ நிர்ணயம்

**சைத்ரோத்ஸவம் :**

சுபஸ்ரீ இரத்தாக்ஷி ஆண்டு சித்திரைமாதம் சைத்ரோஸத்வ தீர்த்தம் கொடுக்க ஷை மாதம் 3 ஆம்நாள் (15—4—84) பானு வாரத்தன்றும் ஷைமாதம் 31 ஆம் நாள் (13—5—84) பானுவாரத் தன்றும் இரண்டு சித்திரை நக்ஷத்திரங்கள் வருகின்றன. இவற்றுள் ஷை மாதம் 3ஆம் நாள் (15—4—84) பானுவாரதினம் சித்திரா நக்ஷத்திரத்துடன் பௌர்ணமியும் கூடுவதால் இதில் தான் தீர்த்தோத்ஸவம் செய்யவேண்டும் என்று சிவாகமங் களில் விதிகள் கூறப்பட்டுள்ளன.

**பாரமேஸ்வராகமத்தில் :**

தீர்த்தர்க்ஷத்வய ஸம்ப்ராப்தே ஏகமாஸே பரம் வரம் ।
அத்ராபி யோக யுக்தம்சேத் பூர்வம் ஸங்க்ராஹ்ய மேவச ॥
தீர்த்தர்க்ஷே பர்வ ஸம்யுக்தே ச்ரேஷ்டம் வை நிர்மிதம்பவேத் ॥
பூர்வே திதி ருக்ஷ ஸம்யுக்தே தத்திநௌ ஸ்நான மாசரேத் ॥
பூர்வர்க்ஷம் திதி ப்யுக்தம் தத் அத்யாஜ்யம் சிகித்வஜ ॥

ஈஸ்வரன் முருகனுக்கு பாரமேஸ்வராகமத்தைக் கூறும் பொழுது ஒருமாதத்தில் தீர்த்த நக்ஷத்திரம் இரண்டு வருமே யானால் இரண்டாவதாக உள்ளதே உயர்ந்தது. அதனுள் முத லாவது நக்ஷத்திரமானது யோகயுக்தமாக அதாவது பௌர்ணமி யுடன் கூடியதாக விருக்குமானால் முதலாவது நக்ஷத்திரமே உயர்ந்ததாகும். அங்கேயே-தீர்த்த நக்ஷத்திரமானது பௌர்ண மியுடன் கூடியிருக்குமானால் திதியும் நக்ஷத்திரமும் கூடியதான முதலிலேயே தீர்த்தம்கொடுக்கவேண்டும். அதைவிடக்கூடாது என்று கூறுகிறார்.

ஆகையால் இந்த சிவாகம வாக்கியங்களைக் கொண்டு இரக்தாக்ஷியாண்டு சைத்ரோத்ஸவத்தை நிகழும் ருத்ரோத்காரி ஆண்டு பங்குனித்திங்கள் 24 ஆம்நாள் (6—4—84) சுக்கிரவாரம் துவங்கி இரக்தாக்ஷி ஆண்டு சித்திரைத்திங்கள் 3 ஆம் நாள் (15—4—84) பானுவாரதினம் தீர்த்தோத்ஸவத்தைச் செய்து திருக்கடவூர், சீகாழி, திருப்பனந்தாள் திருவையாறு முதலிய சைத்ரோத்ஸவஸ்தலங்களில் சைத்ரோத்ஸவம் செய்யபடத்தக்கும்.

---